*Tirāviṭa nāṭu*
*Malar 15, ital 30*
*January 27, 1957*

Record no. 1005

# திராவிடநாடு

மலர் 15 | 27—1—57 | இதழ் 30




சித்திரம், நீங்கள் கண்டதுதான். வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்ருல் சிறுவோருக்கு இதனை எடுத்துச் சொல்லுங்கள். டில்லியின் ஓரவஞ்சனையை, நாம் மட்டுமா? காங்கிரஸ் பெரியவர்களே கூருமலில்லை! உத்தமர், சத்தியசந்தர் என்று போற்றப்பட்ட ஓமந்தூரார் சென்னை மேல் சபையிலே கூறினரே,

"நம் இராஜ்யத்தில் எவ்வளவு வரி போட முடியுமோ அந்த அளவுக்குப் போட்டாகிவிட்டது.

மத்ய சர்க்காரிடமிருந்து கிடைப்பது அதிகமாக இல்லை.

மத்ய சர்க்காரிடமிருந்து உதவி வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்பது தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் குறைவு. தலைவிதி என்றும் நினைத்துக்கொண்டு நாம் சும்மா இருந்துவிடுகிறோம்.

மத்ய சர்க்காரிடம் இதற்காகக் கட்சிச் சார்பில்லாமல் போரிட வேண்டும்" என்பதாக.

அவர் மட்டுமா, யாராரோ கூறினர். இருந்தும் 600-கோடி ரூபாயிலே நமக்கென்று 170-கோடிதான் வழங்குகிறது டில்லி! போதாது என்று சொல்லி டில்லியைக் கெஞ்சினர் காங்கிரஸ் மந்திரிகள்—400-வது தரலாகாதா என்றனர். கிடைத்தது பட்டை நாமம்தான்! எனினும் தேசியத் தோழர்கள் டில்லியின் போக்கைக் கண்டிக்கும் நம்மீது சீறுகின்றனர். நியாயமா!

# நீரில்லாத ஆறு! பாதுகாப்பில்லாத வாழ்வு!!

**இராயலசீமை ஆந்திராவுக்குப் போய் விட்டது என்று எண்ணினேன் — இதோ, இங்கொன்று இருப்பதை இன்றே காண்கிறேன்!**

**வாடிப்போன பயிர்களையன்றோ அறுத்துக்கொண்டு போகின்றனர், விவசாயிகள்! என்னே பரிதாபம்!!**

உள்ளம் நெக்குருக உரைக்கிறார் அவர். கன்னியாகுமரி மாவட்டத்தின் தென் கோடிப் பகுதிகளிலே, நீரற்றநிலையால், நிலமடந்தையைப் போற்றிவாழும் உழவர்கள் தம் நிலையைக் கண்டு இவ்வண்ணம் உரைக்கிறார், அவர்.

விவசாய சங்கத் தலைவரோ, முன்னேற்றக் கழகத் தொண்டரோ, இதனை எடுத்துரைத்தால், "செச்சே! எதையும் இப்படி விவரித்துப் பேசுவதுதான் இவர்கள் வழக்கம். வாடியபயிரை அறுக்கறதாவது! இங்கொரு இராயலசீமை இருக்கறதாவது!!" என்றே நமது காமராசர்கள் சீறுவர். கண்டதும், இப்படி உரைப்பதும் வேறு யாருமல்ல! நமது 'கனம்'களில் ஒருவரான மாணிக்கவேலர் கடந்த இருகிழமைகளுக்கு முன்பு அங்கு சென்று, நேரில் கண்டபின் இவ்வண்ணம் உரைத்துள்ளார்.

இராயலசீமா, ஆந்திராவில் வரண்ட பாலையைப்போல் நீர்ப்பாசன வசதி அற்ற இடம்! அதுபோல இருக்கிறதாம், கன்யாகுமரி மாவட்டம்!!

அமைச்சர், அங்கு போனதும் உள்ளம் நெகிழ்ந்து உரைக்கக் காரணம் இதுவரை அந்தப் பகுதிகள் இவர்கள் வசமில்லாது கேரளத்தில் இருந்ததுதான். குற்றம் தம்மீது வராது என்பதால், துணிந்து கூறுகிறார், அமைச்சர்-ஆகா! என்னே பரிதாபம்! நீர்ப்பாசன வசதியில்லையே, இங்கு என்று!!

இவரைப் பெற்றெடுத்து பெருமையும் தந்த வடாற்காடு மாவட்டம் என்ன வாழ்கிறது! அதற்கு அருகே உள்ள செங்கற்பட்டு என்ன சிறந்து கிடக்கிறது?

ஒரே ஒரு ஆறு **பாலாறு!** இதற்கு மைசூரிலிருந்து தண்ணீர் வர வேண்டும். அது கிடைக்காததால் பன்னெடுங் காலமாக வெறும் மணல் திட்டாகவே கிடக்கிறது. அப்படி மணல் திட்டாகவாவது கிடக்கட்டும் என்றால் அமைச்சர் பக்தவத்சலம் விடுவதில்லை! அங்கொன்று இங்கொன்று என்று இலட்சக்கணக்கான ரூபாய்களைக் கொட்டி 'பாலங்களை'க் கட்டுமாறு செய்கிறார் சர்க்காரை. தமிழ் நாட்டிலேயே நீரில்லாத ஆற்றுக்கு இதுபோலச் செலவழித்துப் பாலங்கள் கட்டப்பட்டு இருக்க முடியாது! அந்தப் பாலங்களை, தான் போய் நின்றோ அல்லது தன் உறவினர் ஒ. வி. அழகேசனை அழைத்து வந்தோ திறப்பு விழாவும் செய்கிறார்!! இப்படி நீரில்லாத ஆறுக்கு, அழகான பாலங்கள் அமைக்கப்பட்டு வருகிறதே தவிர, தண்ணீர் கொண்டு வரும் வேலை நடைபெறவில்லை.

தண்ணீர்! தண்ணீர்!!

சர்க்காரே கவனிப்பீர்.

மைசூரிடம் நீதி கேட்பீர்.

மறுத்தால், தூதுபோவீர்.

முக்கியமான வேலை இது!

வரண்ட செங்கற்பட்டுக்கு வாழ்வு கிடைக்கும்.

வடாற்காடும், செழிப்புறக் கூடும்.

என்று கடந்த நாலைந்து ஆண்டுகளாக ஆங்காங்குள்ள கிராமத்தார் கூடி மாநாடுகள் போட்டு, அதற்கு நமது மதி மந்திரிகளையும் அழைத்து வந்து, அவர்கள் முன்னிலையிலேயே மகஜர்களையும் தந்தனர். பாலாறு, இருக்கிறது இங்கு! தண்ணீரோ, மைசூரில் கிடக்கிறது!! இந்த நிலையில் மாணிக்கவேலனார் குமரிக்குப் போய்க் கொட்டுகிறார் கண்ணீரை.

பாலாறுக்கு வேண்டிய அளவு தண்ணீர் விடலாம் மைசூர்! இதனால் மைசூருக்கு எவ்வித பெரும் நஷ்டமும் ஏற்படப் போவதில்லை. ஆனால், நமது அருமந்த காமராசரின் ஆட்சியால் இதைக்கூடச் செய்ய முடியவில்லை.

**முடியவில்லை**—என்று நாம் கூறக் காரணம், கிராமத்து மக்களின் கிளர்ச்சிகளைக்கண்டதும் சென்னை சர்க்கார் தனது பிரதிநிதிகளை அனுப்பி மைசூர் அரசுடன் பேச்சு வார்த்தை நடத்திற்று. அதற்கு உறுதுணை புரிய டில்லி கூட "பெரு மனது" வைத்து ஆட்களை அனுப்பிற்று! ஆனால் முடிவு என்ன தெரியுமா? "மைசூர் தண்ணீர் பாலாறுக்குக் கிடையாது," என்று சென்னைத் தூதுவர்களின் ஒப்புதலோடு கூடிய ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளதாம்!!

இந்த ஒப்பந்த நகலை, குற்றாலத்துக்குக் 'குளிர் நீர் அருவியாட்ச



சென்றிருந்தபோது மாணிக்கவேலர் கண்டாராம்! அதாவது சென்னை சர்க்காரின் முன் அனுமதியின்றியே, சென்னையின் சார்பில் தூது சென்றவர்கள், 'தண்ணீர் இல்லை' என்றதும் 'சரி' என்று வந்துவிட்டார்களாம்!

இனி பாலாற்றில் நீர் வருமோ! இல்லையோ! — என்கிற ஐயத்தை அதிகப்படுத்திவிட்டனர் ஆட்சியாளர்கள். சும்மாயிருந்த ஆண்டிஊதிக்கெடுத்தான் என்பதுபோல, இவர்களை நாடப்போய், 'இல்லை' என்பதுதான் முடிவாகியிருக்கிறது!

காமராசர் ஆட்சி, தமிழகத்தின் தவிக்கும் பகுதிக்குத் தந்திருக்கும் பரிசு, இது. இந்த இலட்சணத்தில், இந்தப் பிரச்னையில் டில்லி வேறு உதவி செய்ததாகப் பெயர். இது குறித்து கடந்த மாதம் டில்லிப் பார்லிமெண்டில் உறுப்பினர் ஒருவரால் கேள்வி எழுப்பப்பட்டபோதுதான், மேற்கண்ட உண்மைகள் வெளி வந்தன.

இருக்கிற ஆற்றுக்குத் தண்ணீர் கொண்டுவர முடியாத நிலையிலுள்ள காமராசர் அரசுதான், இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் என்னென்னவோ செய்யப்போகிறது எங்கள் நேரு சர்க்கார் என்று சொல்லுகின்றனர்! வடக்கே, கோடிக் கணக்கில் புதிய புதிய நீர்த்தேக்கங்கள் — பாலைவனம் பசுஞ்சோலையாகிறது-வெள்ளியை உருக்கி வார்த்தாற்போல் தண்ணீர் ஓடுவதைப் படக் காட்சிகளில் காட்டுகிறார்கள். இதோ, பாலாறு—வரண்ட நிலையில்! தண்ணீர், நம் கண்களில் தான் வருகிறதே ஒழிய ஆற்றில் காணோம்!

அமைச்சரோ, குமரிக்குப்போய் அங்கு நீர்ப்பாசன வசதியில்லாததால் மக்கள் வாடிய பயிர்களை அறுத்தெடுத்துக் கொண்டு போவதாகவும், பார்க்கப் பரிதாபமாகயிருப்பதாகவும் தெரிவிக்கிறார். இதனைச் செப்பினரே ஒழிய, இந்த வாட்டத்தை நிரந்தரமாகப் போக்க என்ன செய்யப் போகிறோம் என்பதுபற்றி ஏதும் கூறவில்லை! எப்படிக்கூற முடியும்? அதற்கு டில்லியின் தயவு வேணுமே!

* * *

இருந்தும் இல்லாதவர்களாக, உழைத்தும் பயனற்றவர்களாக அவதிக்கு ஆளாகி அல்லலுறுவதில் உலகிலேயே குறிப்பிட வேண்டியவர்கள் உழவர் பெருமக்கள்தான்.

உழவரின் துயரம் எத்தகையது என்பதை சீனவைக் காட்டி நாவல் ஒன்று தீட்டினர் பெர்ல்பர்க் எனும் அம்மையார், 'குட்எர்த்' என்று அதற்குப் பெயர். 'தண்ணீர் கிடைத்து சாகுபடி செய்வதோ பெரும் கஷ்டம். அப்படிச் சாகுபடி செய்தாலோ, திடீரென்று வெள்ளமும் புயலும் வந்து வீணடித்துவிடும். அதுவும் இல்லையென்றால் பூச்சி பொட்டுகள் புகுந்து அலைத்துக் குலைத்துவிடும், "ஐயகோ, உழவர் தம் துயரம் சொல்லவும் ஒண்ணாதே" எனும் பொருள்பட. அந்த நிலை சீனவில்மட்டுமல்ல, ரஷ்யாவிலும் எங்கெங்கு உழவர் பெருமக்கள் உண்டோ அங்கெல்லாம் உண்டு!

எனினும் தான் இட்டபயிருக்குக் கேடுற்றாலும் தான் வாழ்வதற்கு அரசு வழி செய்து தரும் என்கிற நம்பிக்கை ரஷ்யாவிலே உள்ள உழவருக்கு உண்டு. அவனுக்கு வேண்டிய வசதிகள் அனைத்தையும் வழங்குகிறது, அரசு! அதோடு, இயற்கையால் ஏதாவது இடையூறு நேர்ந்தாலும் பாதுகாப்பு அளிக்கத் தயாராக இருக்கிறது அரசு!

இங்கோ,

அரசு,

இரண்டொரு நிலச் சட்டங்களைப் போட்டுவிட்டு

அதோடு பூரிப்படைகிறது!

உழவனுக்குற்ற துயரம் போக்கும் உண்மையான மார்க்கங்கள் காணப்படவில்லை. நீர்ப்பாசன வசதி இல்லை! பாலாறு ஒடுகிறது! கிணற்றையோ ஊருணிகளையோ நம்பிப் பயிரிட்டாலோ, தண்ணீர் சரியாகக் கிடைக்காததால் பயிர்கள் வாடி அவைகளோடு சேர்ந்து உழவனும் வாடவேண்டிய இக்கட்டான நிலை. வரண்ட பூமியில் வாழும் விவசாயியின் நிலை இது! இவ்விதம், வடாற்காடு செங்கற்பட்டு—இராமநாதபுரம்—சேலம்—குமரி போன்ற பல இடங்கள் தவிக்கின்றன.

நெற்களஞ்சியம் எனப் பெயர் பெற்ற தஞ்சையிலும், திருச்சியிலும் தண்ணீருக்குப் பஞ்சமில்லை. ஆனால், கடந்த ஆண்டுகள் புயல் வந்துபுகுந்தது! இந்த ஆண்டோ, பயிர் கொழுகொழுவென உள்ளது! கதிரைக் கையிலெடுத்தாலோ கால்வாசிதான் நெல்—முக்கால்பாகம் வெறும் பதர்!!

"என்ன செய்வோம்? ஒரே கருக்காயாயிருக்குங்க!"

"எப்படிங்க, காலத்தைக் கழிக்கிறது!"

"ஒரே மோசமாப் போயிட்டுதே, வெள்ளாமை!"

எனும் கூக்குரல், எங்கும். இயற்கை, இப்படிச் சோதனை செய்திருக்கிறது, இவர்களை! எப்படி வாழ்வோம் என்கிற ஏக்கத்துடன், அறுவடைக்கு வயலில் இறங்கும் ஒவ்வொரு உழவரும் அவதியடைகிறார்கள்!

**ரஷ்யாவில், சீனவிலிருப்பதுபோல அவர்களுக்கு, இந்த இக்கட்டான சமயத்தில் பாதுகாப்பு வழங்க ஏதாவது திட்டம் உண்டோ சர்க்காரில்? ஏதும் இல்லை—இருப்பதாகச் சொல்லப்படும் நில அடமான பாங்குகளின் அதிபர்களோ, பெரிய மிராசுதாரர்கள்.**

உழவன், இப்படி வேதனையுறத்தான் இங்கு பிறந்தானா? அவனிடமிருந்து வரி வாங்கும் அரசால் அவனுடைய வாட்டத்தைக் கூடப் போக்க முடியவில்லையென்றால் அப்பேற்பட்ட அரசு ஏன்—அதைக் கட்டியாள அமைச்சர்கள் ஏன்?

**அவனுக்கு நீர்ப்பாசன வசதிகள் தேடித்தரப்படுவதில்லை!**

**புதிய திட்டமிலலாவிடினும், இருக்கிற ஆற்றிலும் நீர் கொணரத் தெரியவில்லை!**

**இயற்கை, அவனைக் கோட்டி ஆபத்தை உண்டாக்கினால், அதினின்றும் மீட்கவும் வழி கிடையாது.**

எட்டாண்டு காங்கிரசாட்சியில், 2000-கோடி செலவிட்டு முதல் ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேற்றிய பிறகு நாட்டில் உள்ள நிலைமை இது! இதனை இல்லை என்று எப்படி மறுக்கமுடியும்? நாடு, கண்ணீரோடு, காட்சி தருகிறதே—ஆங்காங்கு.

இந்த நிலைமையை எண்ணிடும் போது உண்மையாகவே வேதனைப்படுகிறோம், நாம். நம் வேதனையை நாம் காணும் ஏடுகள்

இன்னும் அதிகமாக்குகின்றன—ருஷியாவைப்பற்றி ஒருவர் எழுதுகிருர், "அரசியல் முறை அடியோடு மாற்றப்பட்டுவிட்டதால், விவசாயத் துறையில் நவீனம் புகுந்தது. விஞ்ஞான முறை மேலோங்கியது. நிலம் முழுவதும் அரசாங்கத்துக்குச் சொந்த மானதால் நன்மை தீமை இரண்டும் அரசின் பொறுப்பாகிவிட்டது. முறையோடு நிறுவப்பட்ட ஓய்வும், உல்லாசமும் மக்கள் நலனையும் வளத்தையும் பெருக்குகிறது. கலை பயின்று கலாவல்லுநரும் நிபுணர்களுமாக விளங்குகின்றனர், உழவர்கள். 'கரடிக் குகை' என்று அழைக்கப்பட்ட ரஷியக் கிராமங்கள் இன்று நகரத்தைப் போல் எல்லா இன்பங்களையும் பெறுகின்றன. ஓய்வும் உல்லாசமும் அறிவுப் பயிற்சியும் அங்கு ஒரு மாமூலாகிவிட்டன. உழைப்புத் திருவிழாக்கள் பல உருவாகியுள்ளன! Harvest Day (அறுவடை நாள்) எவ்வளவு உற்சாகமாகக் கொண்டாடப்படுகிறது தெரியுமா!!"

படிக்கிறோம்—நாட்டையும் பார்க்கிறோம்—என்ன செய்வது!

திறமையான அரசு இல்லை.

அதன் திட்டமோ, ஒரு பகற்கனு.

செலவழிவதோ, கோடிகோடி.

'நெடும்பலங்கள்' காங்கிரசில்.

நிலப் பிரபுக்களுக்கு யோகம் அடிக்கிறது.

உழவனோ, இருபது மணி நேரம் உழைக்கிறான்! நீரில்லாத ஆறும், பாதுகாப்பிலாத வாழ்வுமே அவன் பெறும் பரிசு.

இந்த நிலை எப்போது மாறும்? உண்மையான சமதர்மம் எப்போது மலரும்? நமது நாடும் என்று சுகபோக சொர்க்கமாகும்? இந்தக் கேள்விகளுக்கு விடை காணவே, தி. மு. க. பாடுபடுகிறது.

உழவரின் துயர் துடைத்து இன்பம் காணவேண்டும். அது, காங்கிரசார் ஆட்சியில் இயலுமா என்னின் சந்தேகமும் சஞ்சலமுமே உருவாகிறது.

வறுமை மாய்ந்து, மனிதன் முழு மனிதனாக வாழ உண்மைச் சமதர்மம் மலர வேண்டும்! நாட்டில் உண்மைச் சமதர்மம் மலர்வதற்காகத்தான் தி.மு.க. தன்னை அர்ப்பணித்திருக்கிறது!! ★

# அந்த 'ஆபத்தும்' வருமாம்!

முப்பத்தாறு கோடி மக்களும் இன்று ஒரு நாட்டினராக விளங்குகின்றோம். நாட்டின் பல்வேறு பகுதிகளில் பல மொழிகள் பேசப்படுகின்றன. அம்மொழிகளை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று சமஸ்கிருதத்தை அடிப்படையாகக் கொண்ட ஆரிய மொழிகள். இரண்டு, திராவிட இன மொழிகள்."

*

இரண்டு பெரும் பிரிவுகள்! ஒன்று சமஸ்கிருதம், இன்னொன்று திராவிட இனமொழிகள்!!—என்று விளக்கமாகக் குறிப்பிடுகிறார், அவர். "ஆமாம்! இது தெரிந்த உண்மைதானே. இதிலென்ன புதுமை?" எனக் கேட்கக் கூடும் தோழர்கள். புதுமை எதுவுமில்லை, ஆனால் இவ்வண்ணம் இந்திய உபகண்டத்தில் திராவிட மொழிக் குழுவுக்குள்ள ஏற்றம் பற்றி எடுத்தோதுபவர் யார் தெரியுமா! எங்கெங்கு போனாலும் அங்கெல்லாம் "திராவிடமாவது தெற்காவது," என்று பேசி வருகிறாரே சென்னை மாநிலத்தின் நிதி அமைச்சராயிருக்கும் சுப்ரமணியம், அவர்தான், இப்படி 1955 ஆனந்த விகடன் தீபாவளி மலரில் எழுதியுள்ளார்.

"பெரும்பாலோரால் பேசப்படும் பாஷை ஹிந்தி என்று பொதுவாகச் சொல்லப்படுகிறது. கணக்கு எடுத்துப் பார்க்கும்போது ஹிந்தி பாஷையைப் பேசுகிறவர்கள் நம் நாட்டில் 13 கோடி பேர்கள். பாக்கி இருக்கும் 23 கோடி மக்களும் வேறு மொழிகளைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள்"

அமைச்சரல்லவா, அவர். அதனால், தனது கூற்றை மெய்ப்பிக்க புள்ளி விபரங்களையும் தேடியெடுத்து வழங்கியுள்ளார்.

| | | |
|---|---|---|
| ஹிந்தி | 1310 | லட்சம் |
| உருது | 220 | ,, |
| மராத்தி | 270 | ,, |
| வங்காளி | 250 | ,, |
| குஜராத்தி | 160 | ,, |
| ஒரியா | 130 | ,, |
| பஞ்சாபி | 120 | ,, |
| அஸ்ஸாமி | 50 | ,, |
| காஷ்மீரி | 20 | ,, |

இவர்களனைவரும், "ஆரிய மொழி பேசுபவர்கள்," என்கிறார் அமைச்சர்! அதோடு, "திராவிட மொழி பேசுபவர்கள்," என்று குறிப்பிட்டு,

| | | |
|---|---|---|
| தெலுங்கு | 330 | லட்சம் |
| தமிழ் | 270 | ,, |
| கன்னடம் | 150 | ,, |
| மலையாளம் | 130 | ,, |

விளக்கமும் தந்துள்ளார்! இந்தப் பதின் மூன்று மொழிகளையும் பேச்சு வழக்கில் இல்லாத சம்ஸ்கிருதத்தையும் சேர்த்து, இந்தியாவிலே பதினன்கு பிரதானமொழிகள் இருப்பதாக அரசியல் சட்டத்தில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

பேச்சுவழக்கில்லாத சம்ஸ்கிருதம்—என்று அமைச்சரே கூறுகிறார். எனினும் அதற்கும் அரியணை அந்தஸ்து அளிக்கப்பட்டிருக்கிறது!

அமைச்சரின் கூற்றுப்படி பார்த்தால், ஆரிய மொழிகள் வடக்கிலிருப்பவை என்பதும், திராவிட மொழிகள் தெற்கே இருப்பவை என்பதும் தெளிவாக விளங்கும்.



திராவிட மொழிகள், பெற்றிருந்த வளம், சிறப்பு, வாழ்வு குறித்து எவரும் மறுக்க முடியாது! அதேபோல சம்ஸ்கிருதத்துக்கும் வடக்கே செல்வாக்கும் சிறப்பும் இருந்திருக்கலாம்!

ஆனால் இன்று, திராவிட மொழி பேசுவோர் மீது, சம்ஸ்கிருதத்தின் குழந்தையான இந்தி, திணிக்கப்படுகிறது.

**கட்டாயப்படுத்தோம்!**

**வற்புறுத்தோம்!**

**இஷ்ட மொழி!**

**திணிக்கோம்!**

என்றெல்லாம் கூறிக்கொண்டே கார்டு கவர்களை இந்திமயமாக்கினர் — காசிலும் நயா பைசாவைப் புகுத்தினர் — டில்லி சர்க்காரில் சாதாரண வேலைக்குப் போக வேண்டுமென்றாலும் இந்தி தெரிந்திருக்க வேண்டுமென்கின்றனர்.

இந்தக் கிழமை இதோ இன்னொரு 'இடி' வருகிறது.

புது டில்லி
ஜன. 17

**உயர்நிலைப் பள்ளியில் கல்விபெறும் மாணவர்கள் மூன்று மொழிகளைக் கட்டாயமாகப் படிக்க வேண்டும். ஒன்று தாய் மொழி அல்லது வட்டார மொழி; இரண்டாவது, இந்தி; மூன்றாவது ஆங்கிலம்; இந்த மூன்று மொழிகளையும் கட்டாயமாகக் கற்கவேண்டும்.**

இவ்விதம் டில்லி கல்வி ஆலோசனை போர்டு ஒரு முடிவை செய்திருக்கிறது.

**பொதுத் தேர்தலில் காங்கிரஸ் வெற்றி பெற்றால் நிச்சயம் இம் முடிவு, டில்லியால் அமுலாக்கப்படும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.**

வடக்கு மொழி! தெற்கு மொழி!!—என்று தெளிவாக வேறுக்கிக் காட்டுகிறார், அமைச்சர்.

ஆனால், தெற்கு மொழிகளை அடக்கும் வகையில் வடக்கு மொழி, திணிக்கப்படுகிறது வடவரால். சம்ஸ்கிருதத்தைப் பேண வடக்கே ஒரு பல்கலைக் கழகத்தை தனிப்பட்ட முறையில் நிறுவியிருக்கின்றனர்! அதற்கு 'வேந்தர்' யார் தெரியுமா? காங்கிரஸ் கட்சியின் டில்லி பார்லிமெண்டு அமைச்சரான **சத்யநாராயண சின்ஹா!** துணை வேந்தர், பார்லிமெண்டு சபாநாயகரான **அனந்தசயனம் அய்யங்கார்!!** வடமொழியைப் பேணவும், அதற்கு உயிரூட்டவும் முயலட்டும். நமக்கு வெறுப்பில்லை. ஆனால், அம்மொழிக்கு ஆதிக்கம் ஏற்படச் செய்ய அதன் ஒரு பிரிவான இந்திக்கு ஏன் சிம்மாசனம் தயாரிக்க வேண்டும்? அதனடியில் தெற்கிலிருக்கும் நம்மையும் போட்டு நசுக்கவேண்டும்?

*

**கட்டாயமாக்காதே இந்தியை!**—என்று, கர்ச்சித்தோம், தாளமுத்து நடராசன் எனும் இருசெல்வங்களை பலி தந்தோம், ஆயிரக் கணக்கில் சிறைக்களம் சென்றோம். இது ஆச்சாரியார் ஆட்சியில், சுதந்திரோதயத்துக்கு முன்பு இந்தி, புறமுதுகு காட்டியது.

பிறகு வந்த

**பிரகாசம்**

**ஓமந்தூரார்**

**குமாரசாமியார்**

ஒவ்வொருவர் காலத்திலும் இந்திக்கு ஏற்றமளிக்க டில்லி முயற்சிப்பதும், நம் எதிர்ப்புக் குரல் கேட்டு ஒடுங்குவதுமாகவே இருந்துவந்தது. உத்தமர், சத்யசந்தர், நேர்மையாளர், ஓமந்தூரார், வீதிகளில் இரத்த ஆறு ஓடச்செய்தார் குடந்தையில், இந்திக்காக! ஏனெனில், டில்லி அவ்வளவு தூரம் மாநிலங்களை இந்தி விஷயத்தில், வலியுறுத்தி வருகிறது!

இப்போது,

**நயாபைசா!**

**கார்டு கவர்களில் இந்தி!**

அரசோச்சுகிறது. அதுவும் போதாதென்று மீண்டும் உயர் நிலைப் பள்ளிகளில் இந்தி கட்டாயமாகுமாம்.

நயாபைசா ஏன் என்றோ, கார்டிலும் கவரிலும் ஏனய்யா இந்தி என்றோ, ஒரு கேள்வி கூட எழுப்பியதில்லை காமராசர் அரசு! அவருடைய சகா, தெற்கு வாழும் திராவிட மொழியினைப்பற்றி கட்டுரை தீட்டும் சுப்ரமணியனார் சிறு எதிர்ப்பு கூடச் செய்யவில்லை! இப்படிப்பட்டவர்களா, டில்லி கட்டாயமாக்கும்படி கட்டளையிட்டால் மறுக்கப்போகிறார்கள். ஒருநாளுமில்லை! இவர்கள் மீண்டும் அரியணை ஏறிடின் ஆபத்துவரப் போகிறது என்பதில் ஐயம் சிறிதளவுமில்லை!

திராவிட மொழிகளின் வகைகள் குறித்தும் அவை பேசப்படும் இடங்கள் குறித்தும், அவைகள் மீது திணிக்கப்படும் 'இந்தி' எத்தகையது என்பது குறித்தும் சுப்ரமணியம் போன்றவர்கள் அறியாமலில்லை.

திராவிட மொழிகளின் கூட்டுக் குடும்பமாக திராவிடம் வாழ வேண்டுமென்பதற்காகவே நாம் திராவிடநாடு கேட்கிறோம் என்பதையும் அவர்கள் உணராமலில்லை.

எனினும், நம்மைக் குறைகூறி, தாசானுதாசர்களாயிருந்து, பட்டம் பதவிகளில் ஒட்டிக்கொண்டு வாழ்வதற்காகவே, டில்லிக்குக் குலாம்களாக இருக்கிறார்கள்.

இதனால், இவர்கள் இலாபம் பெறலாம். ஆனால், நாடு......? அதனை ஓய, எண்ணிப்பார்க்க வேண்டுகிறோம்.

தமிழின் மானம் மங்காத சொத்து! அதற்கு மாசு தேடும் இவர்கள், தவறு எனத் தெரிந்தும் தூசுபோல மக்களை மதிக்கும் இவர்கள், அப்பப்ப எவ்வளவு ஆபத்தானவர்கள்! எவ்வளவு ஆபத்தானவர்கள்!

நாடு சந்திக்கும் கேடுகள், நமது பாரம்பரை சுமந்திடும் சுமைகள், கொஞ்சநஞ்சமல்லவே. இப்படியே வடக்குக்கு அடிபணிந்து வந்தால், வாழுமா தென்னகம் — வாழுமா, தமிழ்-இளைஞர்காள்! புலவர்காள்! ஏறு நடைபோடும் மாணவர்காள்! எண்ணுங்கள் இதனை, எண்ணுங்கள் இதனை.

★

# நமது கடமை

மலர் 15] ஆண்டு சந்தா ரூ. 7 [27-1-57] தனிப் பிரதி 2 அணா [இதழ் 30

தேர்தலில் பங்கேற்கப்போகும் தி. மு. க. தொண்டர்களின் பட்டியலை 'அறிவகம்' வெளியிட்டுள்ளது.

ஆர்வம் படைத்த கழகக் காளையருக்குச் செந்தேன் குடித்ததுபோன்ற ஆனந்தமும், அருமை கொண்ட மாற்றாருக்குத் தேள் கொட்டியது போன்ற உணர்ச்சியும் உருவாகியிருப்பதை உணருகிறோம், நாம். விம்பும் வெறியுணர்ச்சியும் என்றும் வென்றது இல்லையாதலால், அதனை அலட்சியப்படுத்தி ஆக்க வேலைகளில் ஈடுபடுவதே முக்கியம் எனக் கருதுகின்றனர், தி. மு. கழகக் காளையர்.

நீரருந்தச் செல்லுபவனைத் தடுக்க முடியாது என்றாலும், குட்டையைக் குழப்பிச் சேற்றைவாரி யிறைக்கும் குறளர்கள் தென்னகத்தின் அரசியலில் இருக்கிறார்கள். அவர்தம் போக்கினை அலட்சியப்படுத்துவதற்குப் பதில் ஆத்திரம் கொள்வது, அடிக்கடி நாம் கூறுவதுபோல புலிவேட்டைக்குச் செல்லும்போது எலிபிடிக்கத் திரும்புவதுபோன்றதே யாகும். அதனுல் தான் கழகத்தவர், நாடெங்கும் தமது வேலைகளைச் செய்வதிலேயே கருத்தைச் செலுத்துகின்றனர். இது, அதிகரிக்கட்டும் என்று அன்போடு தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

தேர்தல் என்றுல், மிட்டா மிராசுகளு டையே நடைபெறும் போட்டிச் சண்டை என்று கருதப்பட்ட காலம் ஒன்று இருந்தது. காசையு ஏடுபிடிகளையும் விசி, எப்படியாவது வென்று விடலாம் என்கிற மமதையில் உலவியோர் ஏராளம். அவர்களுக்கெல்லாம், ஏழையர் தம் கட்சி தத்தமது கொள்கைகளை வைத்து பவனிவரக் கிளம்பியதும், கிலியும் பயமும் கிளம்பவே, எங்கு செல்வது என்று புரியாது எதற்கும் தஞ்சம் தரும் நிலையிலுள்ள காங்கிரசுக்குள்போய் அடைக்கலம் புகுந்துகொண்டுள்ளனர். அதனை, காங்கிரஸ் வெளியிட்டுள்ள பட்டியல் விளக்கும்! பல இடங்களில், ஜஸ்டிஸ்கட்சியின் உதவியால் காலந்தள்ளியவர்களும், செட்டிநாட்டரசரும், குட்டிக்குபேரர்களும் இடம் பெற்றுள்ளனர். அவர்களனைவரும் தமது பக்கமிருப்பதால், காசாலடித்து தமது காங்கிரசின் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளலாம் என்று காமராசர் கருதுகிறார்! அதனுல்தான், காங்கிரஸ் பட்டியல் ஒரு கண்றுவிக்கோலமாக இருக்கிறது!

காசால் எதனையும் சாதிக்கலாம்—காசு படைத்தோனுக்குப் பங்களாவும் பட்டுமெத்தையும் நிரந்தரமாகயிருப்பதுபோல அரசியல் வாழ்வும் இருக்க வேண்டும் — அவனுக்கு எடுபிடிகளாகவே, தியாகப் பரம்பரை ஏற்றிப்போற்றிக் கிடக்கவேண்டும் என்கிற எண்ணத்துக்குச்சாவுமணி அடித்து, மக்களாட்சியின் மாண்பு இத்தேர்தலில் விளக்கப்படவேண்டும். அதனுல்தான், தி. மு. க. தன்னுடைய இலட்சியப் பாதையில் இந்தத் தேர்தல் களத்தையும் கடந்து செல்வது என்கிற முடிவுக்கு வந்தது.

தி. மு. க.வுக்கு இன்றுள்ள பெரிய எதிரி, காங்கிரஸ்தான்! அது ஆளும் கட்சி என்பதனுல் மட்டுமல்ல, நம் நாட்டைக் காட்டிக்கொடுக்கும் கட்சியும் அதுதான். அதிலும் இன்று அதனை ஆட்டிவைப்பவராகயிருக்கும் காமராஜரின் மனப்போக்கு, உண்மையிலேயே, நாட்டின் நலம் விரும்பிகளுக்கு அச்சத்தையும் அதிர்ச்சியையும் அதிகமாக்கி வருகிறது. காங்கிரசுக்குள்ளேயே 'குத்து வெட்டு' ஆரம்பித்திருக்கிற தென்றுல் காமராஜரின் போக்கினை விளக்கவேண்டுவதுமில்லை!

நாட்டில் கடந்த தேர்தலுக்குப் பிறகு, காங்கிரஸ் மைனரிடியாகவேயிருந்தது. காங்கிரசல்லாதார் ஆட்சியை அமைக்கும் அரிய வாய்ப்பு இருந்தும் டில்லியின் சூதுமதியால், ஆச்சாரியார் புகுத்தப்பட்டார். அவரை அரியணையிலிருந்து இறக்க, அவரது அனுதாபத்தையும் துணைகொண்டார் காமராஜர். பீடத்தமர்ந்ததும், பிடித்திமுத்தும், அனைத்துக் குலவியும், ஆசாபாசங்களை உண்டு பண்ணும் பட்டம் பதவிகளை வழங்கியும், நாட்டின் சேவகர்களாக விளங்கவேண்டிய பலரை, விழுத்தினர், தனக்கு வெண்சாமரம் வீசுவோர்களாகவும் ஆக்கிக் கொண்டார், அந்தத் திறமையொன்றினைமட்டும் மூலதனமாக வைத்து. டில்லியின் ஆதிக்கம் வளரவும் பாசிசக் கூடாரமாம் காங்கிரஸ் சக்திபெறவும் விடாது உழைத்து வருகிறார்!!

இப்போக்கு எங்கு கொண்டுபோய் விடுமோ, என்று அஞ்சினோம் நாம். அடுத்து வரும் தேர்தலில் காங்கிரசைத் தட்டிக்கேட்கக் கட்சியொன்று இருக்குமோ என்றும் பயந்தோம். காங்கிரசை ஒழிப்பதே தன் வாழ்நாளின் கடமையெனக்கொண்ட பெரியாரையே தன் வசமாக்கிவிட்டார் காமராசர் எனின், ஆபத்தின் அளவினை சாதாரணமானதாகக் கருத முடியுமோ!



இதனுல்தான் திருச்சி மாநில மாநாட்டில் தி. மு. க. வரப்போகும் தேர்தலில் என்ன செய்யவேண்டும் என்று, மக்களை தேர்தல் மூலம் ஆலோசனை கேட்டோம். மக்கள் மன்றம், நாட்டில் வளர்ந்து வரும் ஆபத்தினை உணர்ந்ததால், நம்மைத் தேர்தலில் ஈடுபடுமாறு கட்டளையிட்டது. களமும் நோக்கி விட்டோம்! கர்ச்சனைஎழுப்பும் கனவான்களும், அவர்தம் காலடி தொழுவதே கடமையெனக் கொண்டோரும், கேலிக் கணைகளை வீசினர், இதுகளால் என்ன முடியும்என்று. இன்று,'அறிவகம்'பட்டியல் வெளியிட ஆரம்பித்ததும் அருமையால் ஆத்திரச் சேற்றை அள்ளியள்ளி இறைக்கின்றனர்!

தேர்தலில் நிற்க நம்மிடம் உள்ள வாய்ப்பு வசதிகள் கொஞ்சம். எத்தனையோ இடங்களில், நமது கழகக் கிளைகள்கூட இல்லை, எனினும் நாட்டின் மூலை முடுக்கிலுள்ள ஒவ்வொருவரும் நாம்யார் என்பதையும், நமது பணிஎத்தகையது என்பதையும் உணராமலில்லை. அந்த வகையில், பரவாத இடங்களில் கொள்கை பரவவும், எட்டாத இடங்களிலெல்லாம், நம் குரல் ஒலிக்கவும், இந்தத்தேர்தல் மிகமிகப் பயன்படும். இது, இலேசான காரியமல்ல அதுமட்டுமின்றி அரசியல் கட்சியொன்று, அனுதினமும் சண்டப்பிரசண்டம் செய்வதும், தேர்தல் என்றுல் ஒதுங்கிக்கொள்வதும் மக்களாட்சிக்கு ஏற்றதும் அல்ல.

அதனுல்தான், நமது கழகம் பிறந்த பிறகு நடைபெற்ற முதல் தேர்தலில், ஆதரவாளர்கள் பலரைத் தேர்ந்தெடுத்து அவர்களைக் கட்சி ஒப்பந்தத்தில் கையெழுத்திடச் செய்து, பங்கேற்றது. பலனும் கண்டோம்! அவர்களில் பலர் உறிக்கு உறி தாவும் 'உத்தமர்'களாகிவிட்டனர். எனினும், திராவிடப் பார்லிமெண்டரி கட்சி எனும் பெயரால் இருபதுக்கு மேற்பட்டோர் கூடி ஒரு சட்டசபை எதிர்க்கட்சியை அமைத்தனர். நாம் எதிர்பார்த்த அளவுக்கு இயங்கவில்லையெனினும், சட்டசபையில் 'திராவிட பார்லிமெண்டரி கட்சி',எனும் பெயரால் ஒன்று உருவாகவாவது முடிந்தது—ஒன்றும் இயலாதோர் என்று கேலி பேசியோர் நம்மைப்பற்றி அறியவும் ஓரளவு வாய்ப்பாக அமைந்தது. நாம் நடாத்திய மும்முனைப் போராட்டங்களின்போது, அந்தக் கட்சி நமது குரலை முழக்கிற்று சட்டசபையில்!!

இப்போது, நாமே நிற்கிறோம். நமது அபேட்சகர்களின் பட்டியலை பார்த்திடின், ஒவ்வொருவரும் எத்தகையவர் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். கழகத்தின் தூதுவர்கள்! நாட்டுப் பிரிவினையின் நற்றெண்டர்கள்! பட்டம் பதவிக்காகவே, பொதுப் பணிக்குத் தம்மை அர்ப்பணித்தவர்களல்ல. தேசிய எழுச்சியின் திருவிளக்காக விளங்குபவர்கள்! தோற்றுல் 'கிரீடத்தை' இழந்துவிட்டதாகக் கருதுவோர் எவரும் இல்லை; வெற்றிபெற்றதால் 'ராஜநடை' போட்டு நாட்டை ஏறிட்டுப் பார்க்காத, குணம் படைத்தவர்களும் இல்லை. அனைவரும், சராசரிகள்! நாட்டில் அனுதினமும் பவனி வருகிறவர்கள்! நாட்டுக்குக் கேடு வந்தபோது நாடகமாடியும், முதுகில் மூட்டைகள் தூக்கியும் பணிபுரிந்தவர்கள். நாட்டின் நல்வாழ்க்கையில் அக்கரையும் ஆர்வமும் மிக்கவர்கள். ஆதலால்தான் பட்டியல் கண்டதும், தன் அண்ணன் நிற்பதுபோலவும், தம்பி நிற்பதுபோலவும் நமது கழகத்தவர் எண்ணுகின்றனர்! பம்பரமெனச் சுழன்று பணியாற்றுகின்றனர்!

எட்டாண்டுக் காலத்தில், நாட்டின் வாழ்வில், எழில்மிக்க இடத்தைப் பெற்றிருக்கிறோம். அதனுல் தான், காங்கிரஸ் ஏடுகள்கூட "தென்னிந்தியாவில் தேர்தலில் போட்டியிடும் மிகப்பெரிய கட்சி தி. மு. க," என்று குறிப்பிடுகின்றன. இப்படி, வசதிகளற்ற நாம், தியாகத் தழும்புகளாலும், தேச சேவையாலும் அடைந்துள்ள ஏற்றம்கொண்டு ஆந்தைக் கண்ணம் கொண்டோர் மனம் புழுங்குவது அறிவோம். அதனுல், என்னென்ன விதத்தில் தொல்லைகள் தர இயலுமோ அத்தனையையும் செய்து பார்க்க முயலுவர். அந்தப்பக்கம் தி. மு. க. தோழர்கள் திரும்பமாட்டார்கள், என்பதில் நமக்கு உறுதி உண்டு. அதே சமயத்தில்,மாற்றுக் கட்சிகளைப்பற்றி எதையும் மனம்போன போக்கில் பேசாது, அந்த நேரத்தில் நாம் யார், நமது பணி யாது, எத்தனை கிராமங்கள் தொகுதியில் உள்ளன யாரார் அந்த ஊரில் நமது பிரதிநிதிகள், என்கிற விபரங்களை எடுத்துச் சொல்வதிலும், அறிவதிலும் நேரத்தைப் பயன்படுத்த வேண்டும். நேரமும் வாய்ப்பும் மிகமிகக் கொஞ்சம் நமக்கு! எட்டாண்டுக் காலத்தில் நாம் செய்துள்ள பணியினை எடுத்து விளக்கக்கூட நேரமில்லை! ஆகவே, ஒவ்வொரு தோழரும், இருபத்தி நான்குமணி நேரமும் ஈடுபட வேண்டும்—தேர்தலின் முக்கிய நோக்கம் நமது கொள்கைகள் பரவவேண்டுமென்பதால், ஏராளமான துண்டு வெளியீடுகள் அச்சடித்தும், மூலைக்கு மூலை ஒலி பெருக்கியில்லையென்றாலும் சிறு சிறு கூட்டங்கள் போட்டும், பணிபுரியவேண்டும். கொஞ்சமும் மாற்றார் மனம் புண்படும்படி நடக்கவேண்டாம். நமது மனதைப் புண்படுத்துவதே அவர்களுக்கு வேலை! நமக்கு அதுவல்ல வேலை. ஏதோ பந்தமும் சொந்தமும், வாழ்வும் உயிரும், இந்தத் தேர்தலோடு அற்றுப்போவது போல அவர்கள் நடக்கக்கூடும்.வாழ்நாள் பெரிது! வளரும் அன்பே என்றும் நல்லது!—ஆதலால், ஒவ்வொருவரும், நமது கழகத்தின் பெருமையையும் பெற்ற தியாகத் தழும்புகளையும், செய்த நன்மைகளையும் நாட்டுக்கு எடுத்துச் சொல்லுங்கள். நமது பணியில், தேர்தல் ஒரு கட்டம்! அவ்வளவுதான்!! எட்டாண்டு கால வளர்ச்சியினைக் குவித்தெடுத்துப் பார்க்கும் ஒரு இடைவேளை, இது. இதனை மனதிலெண்ணி ஒவ்வொருவரும் தொண்டாற்றுங்கள். உண்மையும் உழைப்பும் என்றும் வெல்லும்!!

★

## நாட்டியக்காரி

"நீ மிகவும் புகழ்பெற்ற நாட்டியக்காரியாவதற்கு இரண்டே இரண்டுதான் தடையாயிருக்கின்றன."

"அப்படியா? அவை எவை?"

"உன் கால்கள்."

'இல் லெஸ்டி ரொர்ட்,' அஸ்லோ.

# மமதை மலையேறி!

அன்புள்ள ஐயா!

ஆண்டு முப்பத்தைந்துகளாக உங்களோடு சேர்ந்து பணியாற்றிய நான் வேண்டுகோள் அனுப்புகிறேன். இதுவரை எனக்கு எவ்வித பதிலும் கிடைக்காததால் இறுதியாக இந்த வேண்டுகோளை அனுப்புகிறேன். காந்திஜியுடனும், காங்கிரசுடனும் நான் கொண்டிருந்த தொடர்பு உங்களுக்குத் தெரியும். அப்படிப்பட்ட நான் உங்களிடமிருந்து உதவிகளை எதிர்நோக்கி, இந்த வேண்டுகோளை அனுப்புகிறேன்.

*

கடிதம் எழுதினர், அவர்! கூட இருந்த தோழராயிற்றே, நமது வேண்டுகோளை அனுப்பினால் கவனிக்கமாட்டாரா என்று காமராசருக்கு எழுதினர்!! பதில் இல்லை. அவருக்கு மேலான காங்கிரஸ் தலைவர் தேபருக்கு எழுதினர். இல்லை, பதில். இந்தியக் குடியரசுத் தலைவருக்கு எழுதினர். நல்வாக்கேதும் வரவில்லை. உலகமே போற்றுகிறதே அந்த உத்தமராவது நமது வேண்டுகோளை கவனிக்கமாட்டாராஎன்று கருதி நேருவுக்கு எழுதினர். ஊகூம், ஒரு பயனுமில்லை.

கடிதத்துக்குத்தான் இந்தக் கதி கிடைக்கிறது! தந்தி கொடுப்போம் என்று தந்திகளை அடித்தார்!! அதற்கும், எவ்வித பதிலும் இல்லை.

காங்கிரஸ் சார்பில் தன்னைத் தேர்தலுக்கு நிறுத்துமாறு அல்ல, அவர் வேண்டுகோள் விடுத்தது; காங்கிரஸ்காரர்தான்; எனினும் அவர் அதைக் கேட்கவில்லை, நாட்டுக்கும், மக்களுக்கும் நன்மை பயக்கும் சில காரியங்களை நிறைவேற்றுவதாக உறுதிமொழி அளிக்குமாறு வேண்டுகோள் விடுத்தார்-அது, குப்பைக்கூடையில் வீசப்பட்டு விட்டது! கொஞ்சமும் கவனிக்கப்படவில்லை.

1. 'சென்னை'க்கு தமிழ்நாடு என்று பெயரிடுக.
2. கிராமங்கள் வாழ வழி செய்யுங்கள்.
3. கைத்தறியை கசங்க விடாதீர்.
4. ஊழல் ஒழிக!
5. காந்தி நிதிக்குக் கணக்குக் கொடு.

இதுதான், அவர்விடுத்த வேண்டுகோளில் இருப்பவை. இதனை நிறைவேற்றுவதாக உறுதிமொழி அளியுங்கள் என்று கேட்டார். உங்களோடுசேர்ந்து பணியாற்றியவன் நான், உங்களிலே பலரும் நானும் சுயராஜ்யப் போரிலீடுபட்ட போது மக்களுக்குத் தந்த வாக்குறுதிகள்தான் இவை, நீங்கள் இவைகளை மறந்துவிட்டதால் நினைப்பூட்டுகிறேன், தயவுசெய்து இந்தக் கோரிக்கைகளை நிறைவேற்றித் தாருங்கள் — என்று கடிதம் எழுதியும், தந்திகள் அடித்தும் கோரினர்.

வாய்மூடி மௌனியான காமராசர் முதல், உலகுக்கே நீதி போதனை புரியும் நேரு வரைக்கும் வேண்டுகோள் விடுத்தார்.

சென்னைக்குத் தமிழ்நாடு என்று பெயரிடுவதால் அவர் வீடு செல்வபுரியாகப்போவதில்லை, அரசியல் ஊழலும் ஒழுங்கீனமும் ஒழிக்கப்படுவதால் அவர் அந்தஸ்து ஒன்றும் உயர்ந்துவிடப்போவதில்லை, கைத்தறியாளர் துயரம் திருவதால் அவருடைய குடும்பத்தினரின் அவலம் துடைக்கப்படப்போவதில்லை, காந்தி நிதி சரிவரப் பராமரிக்கப்பட்டால் அவருடைய அக்காவும் மகளும் அரசியல் தூதராகப்போகலாம் என்கிற ஆசையாலுமல்ல அவர் இந்தக் கோரிக்கைகளை விடுத்தது.

35-ஆண்டுக்காலம் உண்மையாக உழைத்தவர் அவர், காங்கிரசுக்கு! காந்தியடிகளுடன் பாடுபட்டவர்! காங்கிரசின் உயர்வுக்கு உழைத்துழைத்து, வளரும் காங்கிரசைக்கண்டு மகிழ்ந்து திளைத்தவர்! அதனுல், காங்கிரஸ் சீர்கேடு அடைவதையும், அதனைத் தடுக்கும் மார்க்கங்களைக் கண்டறிந்து அதனைத் தடுக்க வேண்டுமென்னும் ஆவலாலும் வேண்டுகோள் விடுத்தார்.

பலனில்லை! பதிலேதும் இல்லை! இந்தப் பயங்கரப் போக்கினைக் கண்ட அவர் என்ன செய்யமுடியும்? "இதுவோ, எம்கதி! இவர்களுக்கு எங்ஙனம் புத்தி வரச்செய்வேன்?" என்று நொந்தவராக, வீட்டைத் துறந்து, வீதியோரமாகப் படுக்கையை அமைத்து, சிங்காரச் சென்னை திருவல்லிக்கேணியில் சென்ற சில தினங்களாக உண்ணாவிரதம் இருந்து வருகிருர்! சாகும்வரை உண்ணா விரதம் ஆரம்பித்துள்ளார்!!

இதே போன்ற கோரிக்கைகளை விடுத்து, விருதுநகர் சங்கரலிங்கனர் துவங்கினர் உண்ணாவிரதம். உயிர் போயிற்று! காமராஜரோ, 'கனம்'களோ கலங்கினரில்லை!

அறிவார் அன்பர் சங்கு கணேசன் இந்த ஆட்சியினர் இரக்கமெனும் ஒரு பொருளிலா அரக்கர்—யார் போயினும், எவ்வளவு பேர் சாகினும் கவலைப்படாத உள்ளம் கொண்டவர்கள்—என்பது அறிந்தும் அவர், கடைசிவேண்டுகோள் விடுத்துவிட்டு அறப்போரில் குதித்திருக்கிருர்.

ஒரு வேளை உணவு இல்லாவிடில் உடல் படும்பாடு அப்பப்ப சொல்லவும் முடியாது! எனினும் ஒன்று இரண்டு என்று நான்கைந்து நாட்களுக்கு மேலாகி வருகின்றன! உடல் வர்வர மோசமாகிறதாம் — உயிர் தன் உடலை விட்டு அணு அணுவாகப்போய்க்



# சங்கரலிங்கனர் போதாதா?

கொண்டிருப்பதும் அறிகிருர் அவர்— காணப்போகின்றவர்களை அவர் வரவேற்கும் காட்சி கலக்குகிறதாம் நெஞ்சை—எனினும் காமராஜரால், ஒரு சிறு பரிவும் காட்டப்படவில்லை! அரசியல் வாழ்வில் தோளொடு தோளிணைந்து பாடுபட்டவர், கொஞ்சங் கொஞ்சமாகச் சாகிருர்; தன்னுடைய நலத்துக்காக அல்ல; நாட்டுக்காக. அரியணை பூபதியோ, அப்படியொரு சம்பவம் நடக்காதது போலவே இருக்கிருர்.

சொந்த ஊரில் சங்கரலிங்கனர் பிணமானர்! அவரும்காமராஜரின் தோழர்தான்—சென்னைக்குத் 'தமிழ்நாடு' என்று பெயரிட வேண்டுமென்பதுதான் அவரது மூலமுழக்கமும். கவலைப்படவில்லை, காமராஜர்!

தமிழ்நாடு என்று பெயர் வைப்பதால் இவர் தாத்தர் வீட்டுச் சொத்து ஒன்றும் பறிபோய்விடாது! தலையிறக்கம் ஏற்பட்டு இவருடைய தர்பார் கொலுவுக்கும் ஆபத்து வந்துவிடப் போவதில்லை!

அது ஒரு நாட்டுப் பிரச்னை. தீயது, கூடாது, வேண்டாம், வெறுக்கிருேம் என்று நாடு கூறுகிறதோவெனின், நாடு முழுதுமே கோருகிறது. நாட்டிலுள்ள அரசியல் கட்சிகள் அனைத்துமே கோருகின்றன — தமிழ்நாடு எனும் பெயரிடுமாறு. இதற்கு ஏன் இவ்வளவு சண்டித்தனம் செய்ய வேண்டும்!

"நாங்கள் என்செய்வோம்? எங்களுக்கும் ஆசைதான்! ஆனல், டில்லி கூடாது என்று கூறுகிறதே?"

என்பது தவிர, இவர்களிடம் ஏது காரணம்? சென்னைக்குத் தமிழ்நாடு என்று பெயரிட, டில்லி விரும்பவில்லையென்பது பெரிதா! ஒரு உயிர்போவது பெரிதா!

காமராஜர் அரசுக்கு, உயிர்கள் போவதுகூடக் கவலைக்குரியதாகத் தென்படவில்லை. நேரு பண்டிதரின் கட்டளையே பெரிதெனப் படுகிறது. இந்தப் போக்கால் இழந்தோம் ஒரு உயிரை! எனும் புக்கூடாகி, விருதுநகர் சுடுகாட்டுக்கு இரைதந்தோம் சங்கரலிங்கனரை!

இப்போது, இதோ, சங்கு கணேசன்! பழுத்த தேசியவாதி—'பேதம் விரும்பியோ, தி.மு.கவோ அல்ல—காங்கிரஸ்காரர். அவர், உயிரைக் கொஞ்சங்கொஞ்சமாக இழந்துகொண்டிருக்கிருர்!

"இந்தியாவில் கிராமங்கள் தோறும் போய் இந்திய கிராம வாசிகள் அனுபவிக்கும் ஏழ்மையைப் பார்த்தால் நெஞ்சம் பதறுகிறது. நமது விவசாயிகளின் ஏழ்மைத்தனத்தை எப்படிப் போக்குவது? அதுவும் சீக்கிரத்தில் போக்குவது எப்படி? இதுதான் நாம் தீர்க்க வேண்டிய முதல் பிரச்னை. மற்றவைகளெல்லாம் அதற்குப் பின்னுல் ஆலோசிக்கப்பட வேண்டியவைகளே. இந்த ஏழ்மைத்தனத்தை நமதுசுதந்திரம் ஒழிக்காது போகுமானல் அத்தகைய சுதந்திரம் நாசமாகப் போகட்டும்."

இப்படிப் பேசினீர்களே பண்டித நேரு அவர்களே, 'இந்தப் பேச்சு எங்கே போச்சு?' என்று கேட்கிருர் கணேசன்! எவ்வளவோ உறுதி மொழிகள் தந்தோமே, அவைகளை நிறைவேற்றுமல் நீலித்தனம் செய்கிருேமே, சரியா அது, இப்போக்கால் அழிகிறதே நாம் வளர்த்த காங்கிரஸ், என்று அழுது புலம்பிக் கேட்கிருர் அவர்!

பதிலில்லை! பலனேதும் கிடைக்கவில்லை!! பண்டிதர் பஞ்சசீலப் போதனை புரிகிருர்-அவரது பக்த கோடிகள் நேருவின் நாமாவளியை உச்சரித்தபடி உலவுகின்றனர். ஒரு உயிர் போயிற்று! இன்னொரு உயிர் போய்க்கொண்டிருக்கிறது!! மாற்றுக் கட்சியினர் என்ருலாவது அரசியல் தந்திரம், அது இது, என்று குற்றம் சுமத்தலாம். குடும்பத்திலிருந்தவர் கேட்கிருர்-கூறினுேமே முன்பு என்று சுட்டிக் கேட்கிருர் — அவர் கோரும் எதனையும் அக்கிரமம் என்று ஒதுக்கிட இயலாது. தமிழ்நாடு எனும் பெயர், கிராம முன்னேற்றம், கைத்தறியாளர் கண்ணீர், ஊழல், காந்தி நிதி விவகாரம்—இதில் எது அவசியமற்றது? எது நியாயமற்றது?

மானம் சிறிதென் றெண்ணி
வாழ்வு பெரிதென்றெண்ணும்
ஈனர்க் குலகந்தன்னில்!—கிளியே
இருக்க நிலைமையுண்டோ!

யந்திரசாலை என்பர்
எங்கள் துணிகள் என்பர்
மந்திரத்தாலே யெங்கும்—கிளியே!
மாங்கனி வீழ்வதுண்டோ?

சொந்தச் சகோதரர்கள்
துன்பத்திற்சாதல் கண்டும்
சிந்தை இரங்காரடி!—கிளியே!
செம்மை மறந்தாரடி!

என்று பாடினர் பாரதியார், நடிப்புச் சுதேசிகள் எனும் தலைப்பிட்டு. அது எவ்வளவு உண்மையென்பதை மெய்ப்பிக்கின்றனர், இன்றைய அரசினர்!!

சொந்தச் சகோதரன் சாகிருன். சிந்தை இரங்கவில்லை! வாழ்வு பெரிதென் றெண்ணுகின்றனர், மானம் சிறிதாகத் தெரிகிறது காமராஜருக்கு!

இப்படிப்பட்டவர்களது ஆட்சி நீடிக்கவேண்டுமாமே! சொந்தக்

### திருத்தம்

பொங்கல் மலரில் "நாடோடி மன்னன்" என்ற சினிமா விளம்பரத்தில், விநியோக உரிமை பெற்றவர்கள்: **கோவை, நீலகிரி: சந்திரபாபு பிக்சர்ஸ், கோவை** என்றிருப்பதை **சந்திர பிரபா பிக்சர்ஸ், கோவை** என்று திருத்திக்கொள்ளவும்.

# சங்கு கணேசனுமா சாகவேண்டும்?

# 'தமிழ்நாடு' என்று பெயரிட்டால் என்ன?

கட்சியினரையே தூசுபோல் மதித்து, அவர்கள் நாட்டின் கேடுகளை உணர்த்த முன்வந்தால் 'ஒழிந்துபோ' என்று கருதுமளவுக்கு மனதில் 'இருட்டு' உண்டாக்கிக்கொண்டிருக்கும் இவர் தம் ஆட்சியால் நன்மை மலரப்போகிறதாமே!!

சாகிறார், சங்கு கணேசன். தர்பார் நடாத்தும் காமராஜரோ, காந்தியடிகளின் வாக்கைக் கால் தூசாக மதித்தவண்ணம், நெடும் பலம் சாமியப்பாவின் திருமகன் எங்கே, தாராபுரம் சேனபதி எங்கே எஸ்.எஸ். ராமசாமி எங்கே, என்று அலைகிறார்—அவர்களோடு கூடிக் குலவுவதில் மகிழ்கிறார் — எப்படியாவது தேர்தலில் வெற்றிபெற வேண்டும் என்று ஓடுகிறார் — சென்னையிலிருந்து திருச்சிக்குப் போய் அங்கிருந்து சென்னைக்கு விமானத்திலே பறக்க முடிகிறது! திருவல்லிக்கேணியில் கிடக்கும் சங்கு கணேசனைச் சந்தித்து, 'ஆகட்டும், பார்க்கலாம்!,' என்கிற 'அமுத' மொழியை வழங்கவும் மனம் வரவில்லை!!

அய்யகோ, காமராசரே, ஆளும் ஆசை உம்மை இப்படியெல்லாமா விரட்டவேண்டும்! நேருவின் நேத்திரபாக்கியம் பெறுவதற்காக நெருங்கியவர்களை யெல்லாமா விரட்டவேண்டும்!

சாகக்கிடக்கும் சங்கு கணேசன், தவறுகளைக் கண்டிப்பதால் காமராசர் கவனம் அவர்பக்கம் திரும்பவில்லை.

தன்னால் மீண்டும் அரசுக்கட்டில் ஏறமுடியாதோ என்னும் கலக்கத்தால், அவர் தன் நெருங்கிய சகாக்களைக்கூட விரட்டி அடிக்கிறார், காங்கிரசிலிருந்து.

வெங்கடகிருஷ்ண ரெட்டியார்
ஜெயராம ரெட்டியார்
வி. கே. ராமசாமி முதலியார்
டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி
எல். எஸ். கரையாளர்

இவர்கள் எல்லாம் யார்? தமிழ் நாடு காங்கிரசின் தலைவராகயிருந்தவர் ஒருவர், துணைத் தலைவராகயிருப்பவர் மற்றொருவர், சட்டசபைக் கட்சி கொறடாவாகயிருந்தவர் வேறொருவர், இவர்கள் எல்லாம் பெருமூச்சுவிட்டவண்ணம் கிளம்பிவிட்டனர் காங்கிரசிலிருந்து! காமராஜருக்கு ஏற்பட்டிருக்கும் அரசாளும் ஆசை கண்டு, நடக்கவொண்ணா அதிசயம் எல்லாம் நடக்கிறது காங்கிரசில்!

தங்களுக்கு அளிக்கப்பட்ட தேர்வு 'டிக்கட்டுகளை' வேண்டாமென்று, கூறியோரே கிடையாது, காங்கிரசில், இது வரை.

இப்போது சீகாழி முத்தையா, சங்கரன்கோவில் ராமசாமியார், குன்னியூரார், உக்கடையார்,...... என்று இப்படி பட்டியல் நீளுகிறது! பரபரப்பும் குழப்பமும் காணப்படுகிறது!

"போனால் என்ன? நான் ஒன்றும் இவர்களைப் பொருட்படுத்தவில்லை!" என்றுராம், காமராஜர். 'விடுதலை', ஒலி பரப்புகிறது இச்செய்தியை. என்னே மனத்துணிவு! எங்கிருந்து பெற்றார், இம்மமதையை! கட்சியின் முக்கியஸ்தர்கள் எல்லாம் கண்டித்து விலகுகின்றனர் — அவரோ, பொருட்படுத்தமாட்டேன் என்கிறார்! காங்கிரஸ் எந்த கட்டத்துக்கு நாடாளும் காவலர்களால் கொண்டு செல்லப்படுகிறது.

காங்கிரசுக்காக உண்மையாகப் பாடுபட்டோர் சாகின்றனர்!— கவலைப்படவில்லை, காமராஜர்.

காங்கிரசைக் கட்டிக்காத்தோர் அக்கிரமத்தைச் சுட்டிக்காட்டி விட்டு விலகுகின்றனர், வேதனையோடு — அலட்சியத்தை அள்ளி வீசுகிறார்.

இந்த மனோபாவம் பெற்ற காமராஜரைக் காணவேண்டுகிறோம்— தேசியத் தோழர்களே! இது எங்கே

### திருமணம்

21—1—57 திங்கட்கிழமை நமது கொழும்பு விற்பனையாளர் வி. எஸ். முருகன்—சீதா லெட்சுமி திருமணம் நடைபெற்றது. திரு. கு. வன்னியசிங்கம் எம். பி. அவர்கள் தலைமை வகித்து திருமணத்தை நடத்தி வைத்தார்கள்.

கொண்டுபோய்விடும் என்பதையும் எண்ணவேண்டுகிறோம்! நேற்று வந்தவளுக்கு வெண்சாமரம் விசப்படுகிறது — கட்டிய மனைவிக்கு கழுத்துச் சுருக்கும் சாவுப்பாதையும் காட்டப்படுகிறது. மனம் வெதும்பி, ஒவ்வோரிடத்திலும்,

கண்ணீர்விட்டோ வளர்த்தோம்?
சர்வேசா! இப்பயிரைக்
கண்ணீரால் காத்தோம்;
கருகத்திருவுளமோ?

என்னற்ற நல்லோர்
இதயம் புழுங்கியிரு
கண்ணற்ற சேய்போற்
கலங்குவதுங் காண்கிலையோ?

என்று ஒவ்வொரு உண்மையான காங்கிரஸ் தொண்டரும் புலம்புவது தெரிகிறது நமக்கு! இந்தப் புலம்பல் தீர்ந்து, நற்பாதை மலர வேண்டுமானால், ஆதிக்க மமதை அகல வேண்டும்!

அது ஒழியாவிடில், அழிவும் துயரமுமே நமக்குச் சொந்தமாகும். சங்கரலிங்கனார் சாவும், சங்கு கணேசன் ஓலமும், தியாகிகள் குமுறலும் அதைத்தான் காட்டுகிறது.

இந்த இழிநிலைபோக, தேசியத் தோழர்கள், நற்புத்தி புகட்டவேண்டும் காமராஜருக்கு. நல் வாய்ப்பு, வருகிற தேர்தல்தான்.

★

## தட்டிக்கேட்டால் சாவுதான் சதமா!

# வேணாட்டுச் செல்வங்கள்

அரேபியாவைச் செல்வம் நிறைந்த நாடாக்கியது மண்ணெண்ணெய்எனில், தென்திருவிதாங்கூர் அல்லது வேணாட்டை, நம்பமுடியாத அளவு அமோகமாகச் செல்வம் கொழிக்கும் ஒரு நாடாக்க வல்லது அதன்கண் பரவியுள்ள அணுசக்தி நிறைந்த மணலேயாம். இம்மணல் கடலோரம் நெடுகவும், தெற்கே லீபுரம் முதல் வடக்கே விசிஞ்சம், கோவலம் வரையில் அடுத்துள்ள கடலிலும் காணப்படுகின்றது. இந்தக் கரைக்கு அருகாமையில் சற்றேறக்குறைய ஐம்பது மைல் வடக்கேயுள்ள சிறு கடலோரப் பரப்பிலும் அது காணப்படுகிறது.

வேணாட்டு உலோக மணலின் இவ்வற்புதக் கதையானது, மத்திய கிழக்கு நாடுகளில் மண் எண்ணெய் கண்டுபிடிக்கப்பட்ட கதையை அநேகமாக ஒத்திருக்கிறது. இந்நூற்றாண்டின் ஆரம்பத்தில் இந்நாட்டில் உல்லாசப் பிரயாணம் செய்த ஜர்மானியர் கன்னியா குமரியிலும் அதைச் சுற்றிலும் காணப்பட்ட வண்ண மணலைச் சிறு அளவில் தம்முடன் கொண்டு சென்றனர். அது ஜர்மானிய விஞ்ஞான சோதனைச் சாலைகளில் பரிசிலனை செய்யப்பட்டது.

அதே சமயத்தில், பனை நாரையும், கயிற்றால் செய்யப்பட்ட இதர உற்பத்திப் பொருள்களையும் கோலாச்சலத் துறைமுகத்தில் கப்பலில் ஏற்றின கப்பல்காரர்கள் பளுவு போடுவதற்காகச் சரக்குகளுடன் கடலோரம் காணப்பட்ட மணலையும் ஏற்றினர். இறக்குமதி செய்த ஜெர்மானியர், இங்ஙனம் மணலைப் போட்டு பளுவு செய்வதை ஆதரித்தனர். தம் பண்டசாலைகளில்சேமித்துவைக்கப்பட்ட இம்மணலைத் தம் விஞ்ஞான சோதனைச் சாலைகளுக்கு அனுப்பினர். அங்கே, இம்மணலில், தொழிலில் புரட்சி உண்டாக்கக் கூடிய மிக விலையுயர்ந்த உலோகங்கள் அடங்கியிருக்கக் கண்டனர்.

இவ்வுலோக மணலின் மதிப்பைக் கண்டுபிடித்ததும், அம்மணலை ஜர்மனிக்கு ஏற்றுமதி செய்யும் விஷயமாக ஆராய்ச்சி செய்ய டீபின்யூ. ஸி. ஷோம் பெர்க் என்னும் பிரத்யேக எஞ்ஜினியரை அனுப்பினர். அவர் 1909-ல் கோலாசலத் துறைமுகத்தில் இறங்கிக் கடலோரத்தைப் பரிசிலனை செய்து பார்த்தார். கோலாசலத்துக்குத் தெற்கே சுமார் நான்கு மைல் தூரத்திலுள்ள மணவாளக்குறிச்சியை அடைந்ததும், தன்கனவு நிறைவேறியதைக் கண்டார். அந்த ஜர்மன் எஞ்ஜினியரின் கோஷ்டியைச் சேர்ந்த ஒருவர் ஷோம்பெர்க் அக்கறுப்பு மணலைக் கை நிறைய அள்ளி எடுத்து, 'நான் கண்டுபிடித்துவிட்டேன், நான் கண்டுபிடித்துவிட்டேன்', எனக் கூச்சலிட்டுக் கூத்தாட ஆரம்பித்தார் என எனிடம் கூறினர். மேலும் தெற்கே நடந்து செல்கையில், முத்தம் மணல் மேலும் கனமாயிருக்கக் கண்டார். அதில் உலோகம் மிகுதியாக அடங்கியிருப்பதை அது குறிப்பாகக் காட்டியது. கன்னியாகுமரிக் கடற்கரையில், கடல் நீர் வரையில் பல வர்ணக் கூழாங்கற்களையும் மணலையும் கற்பாறை அமைப்புக்களையும் கண்ட ஷோம்பெர்க் ஆனந்தக்கண்ணீர் சொரிந்தார். அக்கற்பாறைகள் சிருஷ்டியின் மிக அபூர்வ பொக்கிஷங்களை மறைத்து வைத்துக் கொண்டிருந்ததை அறியலானார்.

### மோனஸைட் தொழிற்சாலை

ஷோம் பெர்க்கின் கண்டுபிடிப்புக்குப் பின் உலோக மணல் பரிசிலனை செய்யப்பட்டது. கடலோரத்திலுள்ள அம்மணலை ஜர்மனிக்கு ஏற்றுமதி செய்யத் திருவாங்கூர் அரசாங்கத்திடமிருந்து அனுமதி உரிமைகள் வாங்கப்பட்டன. பிரிட்டிஷ் ஆட்சி நடந்த அக்காலங்களில் சுதேச சமஸ்தானங்களிலிருந்து சலுகைகள் பெறுவது மிக எளிது. அன்றியும், ஜர்மன் அரசர் பிரிட்டனின் சக்கரவர்த்திக்கு நெருங்கிய உறவினர். எல்லாவிதச் சலுகைகளும் பெற்ற ஷோம்பெர்க் மணவாளக் குறிச்சியில் தொழிற்சாலையொன்று அமைத்தார். அக்காலங்களில் ரகசியமாக வைக்கப்பட்டிருந்த இயந்திர சாதனம் காந்த தத்துவத்தை பிரயோகித்து, கறுத்த மோனஸைட் கொண்ட மணலைப் பிற மணலினின்று பிரித்தது, கோலாசலத்திலிருந்து தனமணல் பெருவாரியாக ஜர்மனிக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. இங்ஙனமாக, வியாபார அளவில் மிகக் குறைவாயிருந்த வேணாட்டின் அப்பிரதானத் துறைமுகம் திடீரென விரிவடைந்தது. அது அந்த ராஜ்யத்தின் வணிகத்தை அதிகரிக்க வில்லை. அரசாங்கத்திடமிருந்து சொற்ப தொகைக்குக் கிடைத்த மகத்தான உலோகச் செல்வத்தின் ஏற்றுமதியே அதிகரித்தது.

ஜர்மனியில், வாயுவால் எரியும் விளக்குக்குரிய மாண்டில் எனப்படும் மெல்லிய வலையை வளப்படுத்த மோனஸைட் எடுக்கப்பட்டது. விரைவில் 'காஸ்மாண்டில்' உற்பத்தியில் ஜர்மனியே உலகத் தலைமை கொண்டது.

### இதர உலோகங்கள்

ஆயினும், ஜர்மன் சோதனைச் சாலைகள் திருவாங்கூரிலிருந்து வந்த மணலில் அடங்கியுள்ள பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சிகளைத் தொடர்ந்து நடத்தின. திருவாங்கூர் உலோக மணலில் தோரியம் இருக்கக்கண்ட ஜர்மானியர் அணுசக்தி உற்பத்தி பற்றிய கருத்தும் கொண்டனர் என ஊகிக்கலாம்.

கன்னியாகுமரி முனையைச் சுற்றியுள்ள கடலிலும் அதருகாமையிலுள்ள இடங்களிலும் நம் தேகாரோக்கியத்தையும் ஆயுள் சம்பத்தையும் அதிகரிக்கும் ஒரு பொருள் கிடைக்கிறது. அது அகர் அகர் எனப்படும் ஒரு கடற்பூண்டு. அதிலிருந்து உடலைப் போஷிக்கும் விலையுயர்ந்த சஞ்சீவியொன்று எடுக்கப்படுகிறது. தென் திருவாங்கூரிலுள்ள கன்னியாகுமரி, முத்தம் முதலிய இடங்களில் அது ஏராளமாக

வினிகிறது. இப்பூண்டுகள் மீனைப் பெரிதும் கவர்கின்றன. அதனால்தான் இப்பிரதேசங்களில் வருஷ முழுதும் மீன்கள் திரள் திரளாகக் காண்கின்றன. பாறைகள் மிகுந்த கடலோரங்களில் வாழும் மீனவர்கள் இப்பூண்டைச் சமைத்துச் சாப்பிடுகின்றனர். இதில் வைட்டமின் அதிகமாயுள்ளதெனக் கூறப்படுகின்றது. இது தென் அமெரிக்கா முதலிய இடங்களிலிருந்து பெருமளவில் ஏற்றுமதி செய்யப்பட்டு, டப்பாவில் உணவுப் பொருள்களை அடைக்கும் தொழிலிலும் காய்கறி உற்பத்திப் பொருள்களைச் சேமித்து வைக்கவும் பயன்படுகிறது. இக்கடற்பூண்டு கற்பாறைகளின்மீதே வளர்கின்றது. அதன் தண்டு பழுப்புப் பச்சையாயும் இலைகள் செழித்த பச்சையாயும் இருக்கின்றன. உலர்ந்துவிடும் போது தாமிரவர்ணமாகிறது. அப்போது அதில் இரும்புச் சத்து அதிகமிருப்பதைக் காட்டுகிறது.

திருவாங்கூர் சர்வகலாசாலையின் ஆராய்ச்சி இலாகா தொடர்ந்து செய்த பல சோதனைகளிலிருந்து கடற் பூண்டியின் அகர் அகர் சத்து தென்னமெரிக்கா, ஜப்பானைவிட அதிகமாயிருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இக்கடற்பூண்டு ஆராய்ச்சியின் பொருட்டு அனுப்பப்பட்ட அமெரிக்க ஐரோப்பிய சோதனைச் சாலைகளில் நடந்த ஆராய்ச்சிகளாலும் இது உறுதிப்பட்டுள்ளது. இப்பூண்டில்மேலும் சில விலையுயர்ந்த பொருள்கள் அடங்கியிருப்பதாகக் கூறப்படுகிறது.

ஜப்பானியர் இக்கடற் பூண்டை ஏராளமாக உண்பதாலேயே நீண்ட ஆயுள் சம்பத்துடையவராயுள்ளனர் என வைத்திய அதிகாரியொருவர் சமீபத்தில் சொன்னர். திருவாங்கூர் கடற்பூண்டை வியாபார முறையில் சேகரித்துப் பயன்படுத்தி மக்கள் அதை உண்பாரானின் இந்திய மக்கள் ஆரோக்கியமும் நீண்ட ஆயுளும் அடைவர். கடற்கரையோரமாயுள்ள கற்பாறைகளில்விளையும் பூண்டையே இப்போது மீனவர் சேகரிக்கின்றனர். கடலில் ஏராளமாக உள்ள ஸ்டாக்கை இனிச் சேகரிக்க வேண்டும்.

கன்னியாகுமரிக்கு வடக்கேயுள்ள மருத்துவ மலையில் சிலாஜது என்னும் உயிரளிக்கும் சஞ்சீவி அகப்படுகிறது. ஆயுர்வேதத்தின்படி, பல நோய்களுக்கு அருமருந்து, தீர்க்க முடியாத நோய்களையும் தீர்க்க வல்லதென நம்பப்படுகிறது. சிலாஜது எனில் கல்மெழுகு என்று அர்த்தம். கல்லுக்குள்ளேயோ, கல்லின் மிருதுவான பகுதிகளிலேயோ உள்ள ஒரு வகைப் பொருள் அது. கல் உருகி நுட்பமான துவாரங்களுக்கு மூலமாகப் பல வருஷங்களுக்கொரு முறை வெளிப்படுகிறது. சிலாஜது தூயவடிவில்பளபளத்து கருநிறமாயிருக்கும், அது இனிய மணம் வீசும், இவ்விடத்தைத் தவிர இமாலயத்தில் இருஷிகேசத்தில்தான் அது கிடைக்கப்பெறும்.

இக்கற்பாறைகளில், தோரியம் அடங்கியிருப்பதால், இந்த சிலாஜது நோய்களைக் குணப்படுத்தும் இயல்புகளுடைய ரேடியோ இயக்கமுடைய ஒரு பொருள்தானு என்றும்ஐயமேற்படுகின்றது.ரேடியோ இயக்கமுள்ள இஸோதோப்புகள் வைத்திய சாஸ்திரத்தில் புரட்சிகரமான மாறுதல் செய்யுமெனப் பிரபல விஞ்ஞானிகள் கூறியிருப்பது இந்தநம்பிக்கைக்கு ஊக்கமளிக்கிறது.

மருத்துவமலையில் நோய்கள் அற்புதமாகக் குணமடைவது பற்றிக் கதைகள் பல வழங்குகின்றன. மருத்துவமலையிலுள்ள கற்பாறைகளிலிருந்து வெளிப்படும் ரேடியோ இயக்கமுடைய பொருள்கள்தாம் நோய்கள் அற்புதமாகக் குணமடைவதற்குக் காரணமாயிருக்கலாம்.

*

மரவள்ளிக்கிழங்கு செல்வத்திற்குரிய மற்றுமோர் ஆகாரம். இக்கிழங்கு தென் அமெரிக்காவில் ஆதியில் ஜனித்தது. அமெரிக்கச் செவ்விந்தியருக்கு இதுவே பிரதான ஆகாரம். ஐம்பது வருஷங்களுக்கு முன் மகாராஜா ஒருவர் அதைப் பரிசோதனையாகத் தம் தோட்டத்தில் பயிரிட இறக்குமதி செய்தார். சொற்ப காலத்தில் அது ஜன ரஞ்சிதமாய் சமஸ்தானத்தில் எங்கும் பரவியது. மண்ணும் அதற்கு ஏற்றதாக இருந்தது. திருவாங்கூரில், புறக்கடைத் தோட்டத்தில் அது பயிராகாத வீடு ஒன்றுகூட இல்லை. அரிசிக்கு அடுத்தபடி மரவள்ளியே மக்களுக்குப் பிரதான ஆகாரம். மரவள்ளிக் கிழங்கிலிருந்து செயற்கை அரிசி, ஜவ்வரிசி, மா, குளுக்கோஸ் போன்றவை தயாரிக்கப்படுகின்றன. குழந்தைகளுக்கும் நோயாளிகளுக்கும் உணவாக அது தரப்படுகிறது. மா நெசவுத் தொழிலிலும் உடலழகுக்குரிய பொருள்களின் உற்பத்தியிலும் பயன்படுத்தப்படுகிறது.

இப்பகுதிகளில் பனை மரம் ஏராளம். ஓலை, கூரை வேயவும், கூடை செய்யவும், பிரம்பு சாமான்களிலும் உபயோகமாகிறது. மரம், கட்டிட உத்திரங்களுக்குப் பயன்படுகிறது. மற்றும் நுண் பொருள் அழகுப் பொருள்கள் பல செய்ய உபயோகமாகிறது. பிரஷ் செய்ய நார் பயன்படுகிறது. நைலான் கண்டுபிடிக்கப்பட்ட பிறகும் பனை நார் மும்முரமாக ஏற்றுமதி செய்யப்படுகிறது. பனஞ்சாறு, வெல்லப்பாகு, சர்க்கரை செய்ய உதவுகிறது. கருப்பட்டி தென் திருவாங்கூரில் பெருவாரியாக உபயோகிக்கப்படுகிறது. இம்மரத்திலிருந்து பவர் ஆல்கஹால் உற்பத்தி செய்யப்படுகிறது. நீரா ஒரு நல்ல பானம்.

தென்னை தென் இந்தியப் பிரதேசத்தின் மற்றொரு செல்வம். கயிற்றுல் செய்யப்பட்ட பலவகைப் பொருள்கள் ஏற்றுமதியாகின்றன. இத்தொழில் மேன்மேலும் விரிவடையக் கூடியது.

இவ்வியற்கைச் செல்வத்துடன் மக்களின் இயற்கை அறிவையும் விடா முயற்சியையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். நாட்டபிமானமும் சேர்ந்தால் மக்கள் சாதிக்க முடியாதது ஒன்றுமேயில்லை.

முற்காலத்தில் நாட்டின் செல்வம் ஏற்றுமதியாகி ஐரோப்பிய பொருளாதார சுபிட்சத்தைப் பெருக்கியது. இப்போது அது மக்களை வளம் செய்யவும், தமிழ் நாட்டுப் பெரு மன்னரான சேர சோழ பாண்டியர் காலத்தைப் போல நாடு மீண்டும் பாலும் தேனும் பெருகியோட வகை செய்யவும் பயன்படுத்தப்படலாம்.

★

# திராவிடத்தின் நீர் வளம்

திராவிட நாட்டினூடே பாயும் நதிகள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் வகையில் சரித்திர முக்கியத்துவம் பெற்றிருக்கின்றன. அவ்வகையில் விஜய நகர சாம்ராஜ்யத்தின் நினைவுச் சின்னமாக துங்கபத்திரா விளங்குவதைப் போன்றே சோழ சாம்ராஜ்யத்தின் சரித்திரத்தோடு காவிரிநதி இரண்டறக் கலந்திருப்பதைக் காணலாம். முன் நாட்களில் சோணுட்டின் தொழிலியலும், பொருளியலும் பெரும்பாலும் காவிரியின் பயன் கொண்டே சிறப்புற்றன.

தஞ்சைத் தரணியை 'தென்னகத்தின் பூஞ்சோலை'யாகவும், 'திராவிடத்தின் நெற் களஞ்சியமா'கவும் பெயர் பெறச் செய்த பெருமை காவிரியையே சாரும். கலை வளம், மொழி வளம் மிக்க தமிழகம் நீர் வளத்திலும் குறைவின்றித் திகழ உதவிடும் காவிரி தமிழகத்தின்—சென்னை மாநிலத்தின் உயிர்நாடி எனலாம். கடந்த நூற்றுண்டுவரை பயிர்த் தொழிலுக்கு பெரிதும் பயன்பட்டு வந்த காவிரி இன்னூற்றுண்டில் மின் விசை உற்பத்திக்கும் குறிப்பிடத்தக்க அளவில் பயன்பட்டு வருகின்றது.

எகிப்துக்கு நைலும், பிரேசிலுக்கு அமேசானும், ஐக்கிய அமெரிக்காவுக்கு மிசூரி, மிஸிஸிப்பியும், டிரான்ஸ் ஜோர்தானுக்கு ஜோர்தானும், பர்மாவுக்கு ஐராவதியும் போன்று தமிழகத்தின் வளம் பெருக், வாழ்வு செழிக்க காவிரி அத்யாவசியமாகின்றது. வளமிக்க வண்டல் படியும் மிகப்பரந்த 'டெல்டா'ப் பகுதியைப் பெற்றிருக்கும் ஒரே பெரு நதி காவிரி என்ருல் வியப்பில்லை. உலகின், பல்வேறு பகுதிகளில் பாயும் நதிகளைவிட பெருமளவில் பயன்படுத்தப்பெறும் நதியும் காவிரியே எனலாம். காவிரியில் பாயும் ஒவ்வொரு துளி நீரும் பயிர்த் தொழிலுக்குப் பயன்படுத்தப்படுகின்றது.

திராவிட நாட்டின் உயிர் நதிகளில் ஒன்ருன காவிரி மைசூர்

**புவியரசு**

மாநிலத்தின் குடகு மாவட்டத்தில் மேர்க்காராவுக் கருகில் மேற்குத்தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகித்தென்கிழக்கு நோக்கி சுமார் 480-மைல்கள் மைசூர், சென்னை மாநிலத்தின் கோவை, சேலம், திருச்சி, தஞ்சை மாவட்டங்களினூடே பாய்ந்து தரங்கம்பாடிக் கருகில் வங்கக் கடலோடு கலக்கின்றது.

காவிரி, தலைக்காவிரியிலிருந்து தரங்கை வரை பாய்வதால் ஏற்படும் டெல்டாப் பகுதி மட்டும் சற்றேறத்தாழ 27,700 சதுரமைல்கள் ஆகும். **இது அயர்லாந்து, லெபனன், இஸ்ரேல் போன்ற தனி நாடுகளின் பரப்பின் அளவுக்கு பாய்கிறது** என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

குடகு மாவட்டத்தினைப் பொறுத்தவரை காவிரியால் எப்பயனும் பெருமளவில் இல்லை எனலாம். ஏனெனில் மிகவும் கற்பாங்கான மலைப்படுகையின் வழியே பாய்வதால் கரையோரங்களில் மட்டும் செழிப்பான தாவரங்கள் வளரவும், மற்றைய பகுதிகளுக்கு அதிகப்பயனின்றியும் ஓடி மைசூர் மாவட்டத்தினுள் நுழைந்த பிறகே மிகப் பெருமளவில் பயன் தருவதாய் அமைகிறது. மைசூர் மாநிலம் விட்டு சென்னை மாநில சமவெளிக்குள் நுழையும்போது இந்நதி 300-முதல் 400-கெஜம் வரை விரிந்து அபரிமித நீரோட்டத்தோடு பல்லாயிரக்கணக்கான கியூ செக்குகள் வேகத்தோடு பாய்கின்றது.

காவிரி உற்பத்தியாகும் இடத்தினின்றும் சங்கமம் வரை ஒரே நிலையில் ஓடாமலும், பெரும்பான்மையான பகுதி படுகை, கருங்கற்பாறைகள் நிறைந்துள்ளமையாலும் அதிகமான அளவு போக்குவரத்துக்குப் பயன்படுவதில்லை. திருச்சி மாவட்டத்திலும் தஞ்சை மாவட்டத்தின் தென் கிழக்குப் பகுதிகளில் மட்டுமே ஓரளவு படகு, பரிசல் போக்குவரத்துக்குப் பயன்படுகின்றது.

காவிரியின் வண்டல்[12] உலகப் பெருநதிகள் பலவற்றில் காணப்படும் வண்டலைவிட மிக அதிக சத்துக்கொண்டதாக உள்ளது; ஆகவேதான் காவிரிக்கரைகள் பச்சைப்பட்டு விரித்தாற்போன்று பசுமையான நெல் வயல்களாலும், குளிர்தரும் பயனுள்ள மரங்கள் நிறைந்துள்ள சோலைகளாலும், வணிகப் பொருள்கள் விளையும் புஞ்சைத் தோட்டங்களாலும் நிறைந்திருக்கின்றது.

*

தமிழ் நாட்டில் சோழர்கள் காவிரியை எந்தெந்த வகைகளில் பயன்படுத்திக்கொண்டனரோ

அதேபோன்று மைசூர் மாநிலத்தை ஆண்ட அந்நாள் மன்னர்கள் காவிரியில் 12 இடங்களில் அணைகள் அமைத்து நீரைத் தேக்கி வளம் பெருக்கினர். இதில் மிகச் சிறந்ததென்று பிரிட்டிஷ், பிரெஞ்சு பொறியியற்கலை வல்லுநர்களால் போற்றப்பட்டது. 'மாடட் கட்டே' என்ற செயற்கைக் கால்வாயும், அணையுமாகும். இக்கால்வாய் 72 மைல்களுக்கு மேல் பாய்ந்து ஏறத்தாழ 10,000 ஏக்கராக்கள் பாலை நிலத்தை கனி குலுங்கும் சோலையாக்கியிருக்கின்றது.

காவிரி மைசூர் மாநிலத்தில் இரண்டு இடங்களில் பிரிந்து கூடி இரட்டைத் தீவுகளை உண்டாக்கியிருக்கின்றது. அவற்றிலே ஒன்று உலகப் புகழ்பெற்ற நீர்வீழ்ச்சி களில் ஒன்றான சிவசமுத்திரம். மற்றொன்று சரித்திரப் புகழ்பெற்ற சிரங்கப்பட்டணம். சிரங்கப்பட்டணத்தைக் காணும்தோறும், அங்கே அழிந்த கோட்டை கொத்தளங்களை நோக்கும்போதும் ஐதர் அலி, திப்புசுல்தான் போன்ற மன்னர்கள் காலத்து சரித்திரக் காட்சிகள் நம் மனக்கண்முன் தோன்றும். 'இயற்கைக் காட்சிகளின் இராணி' என்று கடந்த அரை நூற்றாண்டுக்கு முன்பு இந்திய உபகண்டத்தைச் சுற்றி வந்த பிரிட்டிஷ் பிரபுக்களால் பேரறப்பட்ட சிவசமுத்திரம் நீர்வீழ்ச்சி, காவிரி நதி இரட்டைக் கால்வாய்களாகப் பிரிந்து 200க்கு மேற்பட்ட சரிவுகளில் வழிந்தோடும் இடத்தில் அமைந்துள்ளது. இந்த நீர்வீழ்ச்சி காணக் கவர்ச்சியையும், மனதிற்கு மகிழ்ச்சியையும் தருவதோடு நில்லாது நீர்மின் விசை உற்பத்தி செய்யவும் பயன்படுகின்றது.

சிவசமுத்திரம் நீர் வீழ்ச்சியில் மிகப் பெரிய சுழற் கருவிகளைப் பொருத்தி சுழலச் செய்து சுமார் 42,000 கிலோ வாட்களுக்கு மேல் மின் விசை உற்பத்தி செய்கிறார்கள். இம் மின் விசை மைசூர் மாநிலத்திற்கு மட்டுமின்றி சென்னை மாநிலத்திற்கும் பயன்படுகிறது. மைசூர் மாநிலத்தில் உற்பத்தி செய்யப்படும் மொத்த மின் விசையில் பெரும்பகுதி சிவசமுத்திரம் மின் விசை நிலையம் உற்பத்தி செய்வதேயாகும்.

அடுத்து மைசூர் மாநிலத்தில் காவிரி நதியில் கிருஷ்ணராஜ சாகர் என்ற பெரும் அணை கட்டப்பட்டுள்ளது. இந்த அணை நம் முன்னோர்கள் நீர்த் தேக்கங்கள் அமைப்பதில் எத்துணை சிறந்து விளங்கினர் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். சுமார் 8600 அடி நீளத்தில் 124 அடி ஆழத்தில் 44000 கன அடிகள் தண்ணீரைத் தேக்கும் 130 அடி உயர பிரம்மாண்டமான அணையைக் கட்ட சாதாரண கற்களையும், சுண்ணும்புக் காரையையும் பயன்படுத்தி, மிகவும் உறுதியான வகையில் அமைத்துள்ளது உண்மையிலேயே வியப்புக்குரியதாகும். இந்திய உபகண்டத்தில் அமைந்துள்ள மிகப்பெரிய அணைகளில் இது குறிப்பிடத்தக்கதாகும். இவ்வணையின் மூலம் 1,25,000 ஏக்கராக்கள் பயனடைகின்றன.

கிருஷ்ணராஜ சாகருக்கு முன் பகுதியில் காவிரி நீர் கேலாப்பூர் கால்வாய், ராமனுஜபூர் கால்வாய், இராமசுந்தரக் கால்வாய், மிர்லி கால்வாய், சாமராஜ வலக்கரை, இடக்கரை கால்வாய்கள் மூலம் 274 மைல்கள் பாய்ந்து 35,422 ஏக்கராக்களையும், கிருஷ்ணராஜ சாகருக்கு பின் பகுதியில் இர்வின் கால்வாய், மாதூர் கால்வாய், கேரகடா கால்வாய், காவேரி கால்வாய், லோகசாரக் கால்வாய், ஹெப்பக் காவடி கால்வாய், சிம்சா வலக்கரைக் கால்வாய் மற்றும் பழைய கால்வாய்களின் மூலம் 540 மைல்கள் பாய்ந்து 1,87,345 ஏக்கராக்களையும் சாகுபடிக்குகந்ததாக்குகின்றது.

> "போர்ட் சையீது" எனும் துறைமுகத்தைக் காப்பாற்றிட, எகிப்திய வீரர்கள் நடாத்திய வீரப் போராட்டத்தைப்பற்றி யாவரும் அறிவோம். இந்தப் பெயர் நாட்டின் ஒவ்வொரு இடத்திலும் ஒலிக்கவேண்டும் என்று எகிப்திய சர்க்கார் ஒரு நடவடிக்கையெடுத்துள்ளது. எகிப்திலுள்ள எல்லா நகரங்களிலுமுள்ள ஏதாவதொரு தெருவுக்கு இத் துறைமுகத்தின் பெயரிடப்படும். பழைய பெயரை மாற்றி, உணர்ச்சியும் வீரமும் சுதந்திர தாகமூட்டும் இத் திருப் பெயரை இடுமாறு எகிப்திய அரசு அண்மையில் உத்திரவிட்டுள்ளது.

மைசூர் மாநிலத்தை வளம் கொழிக்கும் எழிற் கூடமாக்கிய பின் காவிரி தமிழகத்துள் நுழையும்போது எல்லை வரையறுக்கும் பணிபுரிகின்றது. கோவை, சேலம் மாவட்டங்களைப் பிரிக்கும் எல்லைக் கோடாக ஓடி, திருச்சி மாவட்டத்தையடைகிறது. இந் நதி சேலத்தையடுத்த 25-கல் தொலைவில் உள்ள மேட்டூர் என்ற சிற்றூருக்கருகில் இரண்டு மலைத் தொடர்களுக்கிடையே பாய்கின்றது. இந்த மலைத்தொடர் இடைப் பகுதியை தடுப்புச்சுவர் மூலம் அணைகட்டி தண்ணீர் தேக்கப்படுகின்றது. இதுவே உலகப் புகழ் பெற்ற மேட்டூர் அணையாம்.

மேட்டூர் அணையைப் பார்க்குந்தோறும் கர்னல். எல்லிஸ் அவர்களைப்பற்றிய எண்ணம் தோன்றாமற் போகாது. அறுபது ஆண்டு காலமாக திட்ட அளவோடு நின்ற அணையை 1910-ம் ஆண்டில் நடைமுறையில் செயலாற்றத் துரிதப்படுத்தியவர் எல்லிசே ஆவார். 1925-ம் ஆண்டு ஜூலைத் திங்கள் 20-ம் நாள் அணைகட்டும் வேலை துவக்கமாயிற்று. அதுவே இன்று ஒரு மைல் நீளத்தில் 176 அடி உயரத்திற்கு கட்டப்பெற்று 60-சதுரமைலில் 9,35,000 மில்லியன் கன அடி தண்ணீரைத்தேக்கி வைக்கும் உலகப் பெரும் அணைகளில் ஒன்றாகிச் சிறப்புறுகிறது. இந்த அணை கட்டப்பட்ட 10,00000 டெல்டாப் பகுதியில் ஏக்கர்கள் இருபோகச் சாகுபடிக்குக் கொண்டுவரப்பட்டுள்ளதென்றால், அது ஒன்றே இவ்வணையின் சிறப்புக்கோர் சான்றாகும். இதில் மிகவும் குறிப்பிடத்தக்கதென்ன வெனில் வெள்ளப்பெருக்கு மிகும் நாட்களில் இந்த நதி திருச்சி, தஞ்சை மாவட்டங்களுட் புகுந்து மிகுந்த சேதம் விளைவித்து "தமிழகத்தின் சோக நதி" என்ற பெயரைப் பெற்றிருந்தது முன்பு. மேட்டூர் அணை கட்டப்பட்ட பிறகு வெள்ளச் சேதம் தடுக்கப்பட்டதோடு, அவ்வெள்ள நீர் சேமிக்கப்பட்டு இரு முறைச் சாகுபடிக்குப் பயன்படுத்தப்படுத்தப்பட்டது. அதன் காரணமாகத்தான் தஞ்சை நெற் களஞ்சியமாக மாற முடிந்தது. அதோடன்றி தற்போது புதிதாக வெட்டப்பட்டுள்ள மேட்டூர் கால்வாய் மூலம் சேலம் மாவட்டத்தின் பஞ்சப் பகுதியான திருச்செங்கோடு வட்டம் ஓரளவு செழிப்படைய ஆரம்பித்துள்ளது.



*

பயிர்த் தொழிலுக்கு மேட்டூர் அணை பெருமளவில் பயன்படுவதைப் போன்றே மின்விசை உற்பத்தியிலும் சிறந்த வகையில் பயன்படுகின்றது. மேட்டூர் அணையினின்றும் நீர் வெளிவிடப்படும் (சுரங்க) வழியில் மிகப்பெரும் சுழற் சக்கரங்களைப் பொருத்தி அச் சக்கரங்களின் சுழற்சியினின்றும் 30,000 கிலோவாட்கள் மின் விசை உற்பத்தி செய்யப்படுகின்றது. மேட்டூர் மின்விசை நிலையத்தில் உற்பத்தி செய்யப்படும் மின் சக்தி ஈரோடு, சிங்காரப் பேட்டை போன்ற வினியோக நிலையங்களுக்கு அனுப்பப் பெற்று அங்கிருந்து தமிழகத்தின் பல பகுதிகளுக்கும் அனுப்பப்படுகிறது. ஈரோட்டில் மேட்டூர் மின்விசை 'பைகாரா' மின்விசையோடிணைக்கப் பெற்று சென்னை மாநிலத்தின் கிழக்குக் கரையோரம் வரையுள்ள இடங்களுக்கு அனுப்படுகின்றது. மேட்டூர் மின்விசை மூலம் தமிழகத்தில் புதிய தொழில்கள் பல மலர்ந்து பல்லாயிரவர் வாழ வாய்ப்புக் கிட்டிற்று.

சேலம் மாவட்டத்தை நீங்கிக் காவிரி திருச்சி மாவட்டத்திற்குள் நுழைந்து கரிசல்களி நிறைந்த சமவெளியில் பாய்ந்தோடுகிறது. இந்த மாவட்டத்துள் காவிரி பாயும் கரைகளிலெல்லாம் அழகே தனிதான். செழிப்பாக வளர்ந்து குலை தள்ளிக்காட்சிதரும் வாழைத் தோட்டங்களும், மாவும், தென்னையும், பலாவும், வெற்றிலைத் தளிர் கொடிக்கால்களும் நிறைந்து தோற்றமளிக்கும் காட்சியைக் கண்ணுறும்போது இதயத்தில் இன்பம் சுரக்கும். திருச்சி மாவட்டம் வணிகப் பொருள்களான வாழை இலை, காய, பழம், வெற்றிலை முதலியவற்றால் பெயர் பெற்றதே காவிரியால்தான் என்றால் வியப்பில்லை. திருச்சியின்பொருளாதார உயிரோட்டம் காவிரிநதியின் நீரோட்டத்தைக் கொண்டே கணிக்கப்பட வேண்டியுள்ளது. இந்த மாவட்டத்தினுள் காவிரி நுழையும் போது இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து இடையே திரு அரங்கம்என்னும் தீவுச் சிற்றூரை உண்டாக்குகிறது. இத் தீவின் மேற் பகுதியில் ஓடும்பிரிவு கொள்ளிடம் (கொள் — இடம்) என்ற பெயரையும் கீழ்ப்பகுதியில் ஓடும் பிரிவு காவேரி என்ற பெயரையும் பெறுகின்றன. இந்த கீழ்க்காவேரி திருச்சிராப்பள்ளியில் பல்லவ மன்னன் மஹேந்திரவர்மனால் கட்டப்பெற்று திராவிடத்தின் கலையழகுக்கோர் எடுத்துக் காட்டாய்-எழிற் குன்றாய்—அமைந்திருக்கும் மலைக்கோட்டையின் அடிவாரத்தோடு ஓடுகின்றது.

இயற்கையிலேயே கொள்ளிடம் சரிவான பள்ளத்தாக்கோடு ஓடுவதால் காவிரி நீரின் பெரும் பகுதி கொள்ளிடத்தினுள் பாய்ந்து வந்தது. இதன் மூலம் கொள்ளிட நீரைப் பயன்படுத்த இயலாமல் போனதோடு, காவிரிப் பாசனத்தில் இருந்த வயல்கள் நீரின்றி வாட ஆரம்பித்தன. காவிரிக் கரையோரப் பகுதியில் பஞ்சமும், கொள்ளிடக் கரையோரப் பகுதியில் வெள்ளச் சேதமும் ஏற்படுவதைத் தடுக்க பழம்பெரும் தமிழ் மன்னர்கள் ஆண்ட அந்த நாட்களில் சிறந்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டதாகச்சரிதக் குறிப்புகள் உள்ளன. கடைசியில் நான்காம் நூற்றாண்டில் காவிரியில் 1080 அடி நீளத்தில் 40 விருந்து 60 அடி வரை அகலத்திற்கு ஓர் பெரும் அணை கட்டப்பட்டது. இந்த அணை இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியான இந்நாள் வரை அதாவது 16 நூற்றாண்டுகள் காலமாக எவ்வித பழுதுமின்றி பெருமளவில் பயன்பட்டு வருகின்றது. காவிரி டெல்டாப் பிரதேசத்தில், பிரிட்டிசார் தென்னாட்டைத் தன்வயப்படுத்திக் கொண்ட பிறகு அணைகள் அமைக்க இந்த அணை ஓர் முன்மாதிரியாக விளங்கிற்று. காவிரியில் அமைக்கப்பெற்ற இவ்வணையால் நீர் விரயமாகாமல் தடுக்கப்பட்டதோடு, வெள்ளம் தடை செய்யப்பெற்று, அதிகமான ஏக்கராக்கள் புறம்போக்கு நிலங்கள் சாகுபடிக்கும், ஒரு போகச் சாகுபடி நிலங்கள் இருபோகச் சாகுபடி நிலங்களாகவும் மாற்றப்பெற்றன. இதன் மூலம் சென்னை மாநிலத்தின் பொருள் நிலை பெருமளவில் ஸ்திரப்படுத்தப்பட்டது. இந்த அணை ஏறத்தாழ 6,69,000 ஏக்கராக்களுக்கு தண்ணீர் வழங்குகிறது. அடுத்து சர். ஆர்த்தர் காட்டன் அவர்களால் 1836-38ம் ஆண்டுகளில் கொள்ளிடத்தில் 2250 அடி நீளத்தில் ஓர் அணை கட்டப்பட்டது. இந்த அணை 10,00000 ஏக்கராக்களுக்கு நீர் வழங்கிச் சிறப்புறுகிறது.

இந்திய உபகண்டத்திலேயே காவிரி டெல்டாவைப்போன்று இலாபகரமானதும் பயன்தரத்தக்கதுமான டெல்டா வேறெங்குமே கிடையாது என்பது புள்ளி விபரங்கள் கூறும் பேருண்மையாகும். இத்துணை வளம் பல கொண்ட திராவிடர் தம் தாயகம் தனியரசாய் மலர விழைதல் தவறுமோ?

★

## ரேஸ் குதிரைபோல

டிகாஸ் என்ற பிரபல ஓவியருடைய வர்ண சித்திரம் ஒன்று இலட்சம் டாலருக்கு ஏலம் போயிற்று. இதை அந்த ஓவியரே பார்த்துக்கொண்டிருந்தார். அப்போது அவரை யாரோ, இப்போது உங்கள் மனதில் என்ன உணர்ச்சி ஏற்படுகிறது?" என்று கேட்டார்.

"அதுவா? சொல்லுகிறேன் கேளுங்கள்; ஒரு ரேஸ் குதிரை ரேஸ் ஒன்றில் வெற்றியுற்றதாக வைத்துக் கொள்ளுங்கள், அதன் ஜாக்கிக்கு அழகான கப் ஒன்றைச் சன்மானம் அளிப்பார்கள், அந்த கப்பை அந்தக் குதிரை பார்த்து என்ன உணர்ச்சி அடையுமோ அதே உணர்ச்சிதான் இப்போது என் மனத்திலும் உண்டாகிறது."

—அமெரிக்கன் ஆர்ட்டிஸ்ட்.

**பெர்லின்!**—சாய்ந்துபோன சர்வாதிகாரி இட்லர், இங்கிருந்தபடி, ஐரோப்பாவையே ஆளலாம் என்று கனவு கண்டான். ஜெர்மனியின் தலைநகரமான அது, இன்று எப்படியிருக்கிறது, தெரியுமா? பழைய திமிரும், அட்டகாசமும் அழிந்த நிலையில் மட்டுமல்ல, இரண்டாகக் கிடக்கிறது!

நாடுகளை எப்படிப் பிரிப்பது, பிரிந்து எப்படி வாழ்வது என்று சந்தேகம் கிளப்புகிறார்களே அவர்கள் அறிய வேண்டும் பெர்லின், ஒரு மாபெரும் தலைநகரம்! இன்று ஒரே ஆட்சியில் அல்ல, இரண்டு அரசுகளுக்கு உரிய இடமாக இருக்கிறது.

**மேற்கு பெர்லின்! கிழக்கு பெர்லின்!!** — என்று இரண்டாகப் பிரிக்கப்பட்டு, மேற்குப் பகுதி அமெரிக்கா—பிரான்ஸ் — பிரிட்டன் வசமும், கிழக்கு, ருசியாவசமும் உள்ளது. ருசியா எல்லையில் வாழும் ஜெர்மானியர், நேச நாடுகள் எல்லையில் உள்ள பெர்லினுக்குள் நுழைய "பாஸ்போர்ட்" இல்லாமல் போக முடியாது! இந்தத் தெருவிலிருந்து அந்தத் தெருவுக்குப்போகவும்அனுமதி அவசியமாம்!!

உலகப் போருக்குப் பிறகு ருசியாவுக்கும் நேச நாடுகளுக்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தின் விளைவாக ஜெர்மனி இரு கூறுகப் பிரிக்கப்பட்டது — அதனால் பெர்லினும் இரண்டாக நேர்ந்தது. அது முதல் ஒன்றாக வாழ்ந்த ஜெர்மானிய மக்கள், இரண்டுபட்டு வாழ்கின்றனர்! இரு அரசுகள் அவர்களுக்கு!

இதுபோல ஒரே மக்களை இரு கூறாக்கி அவர்களை இம்சைக்கு ஆளாக்க அல்ல, நாம் திராவிடநாடு கேட்பது, வடவர் வேறு! தென்னவர் வேறு! வடவர் மொழிவேறு! தென்னவர் மொழி வேறு! வாழ்க்கை, கலை, நாகரீகம் பண்பாடு எல்லாமே வேறுவேறு. வெண்ணெய்க்கும் சுண்ணாம்புக்குமிருக்கின்ற அளவு வேற்றுமையிருக்கிறது. இப்படிவேறுவேறானவர்களை ஒன்றுபடுத்தி ஒரே கூண்டில் அடைத்துவைத்து ஐரோப்பா முழுவதையும் ஒரே நாடாக்க ஜெர்மானிய இட்லர் விரும்பினான். வீழ்ந்தான். அதுபோல, வேறு வேறு குண சுபாவங்களும், கலையும் பெற்றோரை ஒன்றாகப்போட்டு அடைத்து வைப்பது என்றுமே சாத்தியமாகாது. தெற்கும் வடக்கும் பிரிந்துதான் வாழ வேண்டும். அதுதான் இரண்டுக்கும் நல்லது.

இதனைச் சொல்லி பிரிவினை கோரும் நம்மை நோக்கி, பிரிந்தால் எப்படி வாழமுடியும்எனக் கேட்போர், கொஞ்சம் எண்ணிடல் வேண்டும். அந்தப் பிரிவினை, அவசியமற்றது! ஆயினும் ஒரே நகரம் இரண்டாட்சிக்குள், இருக்கிறது இன்று. அப்படிப்பட்ட பிரிவினையல்ல நாம் கேட்பது. திராவிட நாடு அமைந்தால் தீமை விளைவிக்குமா, நன்மையைத் தருமா என்பது தான் முக்கியம். திராவிடநாடு பிரிந்தால் நன்மை ஏற்படும் என்பதனை புள்ளிவிபரங்களோடு விளக்கி வருகிறோம்! எனினும், பிரிந்தால் எப்படி வாழமுடியும் என்று ஒரு சந்தேகத்தைக் கிளப்புகின்றனர். பிரிந்தால், நிச்சயம் வாழமுடியும் — நன்றாகவே வாழமுடியும்— அதனால்தான் திராவிடநாடு கோருகிறோமே ஒழிய, ஒரே இன மக்களைப் பிரிந்து வாழச் சொல்ல அல்ல.

★

## கேட்பீர்! கேட்பீர்!

கேட்பீர் கேட்பீர் மக்களே!—ஓட்டுக்
கேட்கவரும் மாட்டு ஆட்களைப் பார்த்துநீர்

வீட்டில் நாட்டில் விளைந்து மென்ன
மேல்சபை சென்றும் அடைந்ததுமென்ன?

ஆறுதல் கூற வந்தது முண்டா?
அழுதநம் கண்ணீர் துடைத்தது முண்டா?
வளர்புனல் நஞ்செய் வளஞ்செய்த துண்டா?
வறுமையைப் போக்க வழிசெய்த துண்டா?
ஊர்வாழ் ஏழை உயர்ந்தது முண்டா?
ஒன்சிறார்க் கறிவு தழைத்தது முண்டா?
யார் நீர் இதற்குமுன் வந்தது முண்டா?
சிறுபயன் அடைந்தவர் யார் இங்குக்
கொண்டா? என்றே ( )

[ கவிஞர் வாணிதாசன் ]

காஞ்சீபுரம், 95, திருக்கச்சிநம்பி தெரு "திராவிடநாடு" அச்சகத்தில் [illegible] அண்ணாதுரையால் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகிறது.

